# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

KALKI 12.3.2006
ரூ.8.00
80 பக்கங்கள்

பிச்சை எடுத்தாவது
கட்சி நடத்துவோம்!



*You can*

# Win 75% Scholarship

on total course fee




## PROVE YOUR INTELLIGENCE & WIN SCHOLARSHIP

**SAT 2006** SCHOLARSHIP APTITUDE TEST FOR DESERVING STUDENTS

இத்தேர்வுக்கு எவ்வித கட்டணமும் கிடையாது

உங்கள் அறிவுத்திறனை நிரூபித்து வெல்லுங்கள்!

Exam Date: APRIL 2 SUNDAY

JAVA

CSC

## ABOUT THE EXAMINATION

- No Entry fee for SAT exam.
- SAT exam question paper comprises of 25 objective type questions from General Knowledge, Science, Geography and Mathematics.
- SAT exam will be conducted in English / Tamil.
- No age bar to participate in this exam.
- Basic Qualification must be above 8th Std.

**CSC®**
**COMPUTER EDUCATION**
AN ISO 9001 : 2000 CERTIFIED INSTITUTION

SAT is conducted only once in a year - Don't miss it.

தவணைமுறை வசதியும் உண்டு

**Collect FREE admit card from your nearest CSC centres**

✉ 'அடுத்த முதல்வர் யார்?' இந்த கட்ட கணிப்பு எல்லாம் பலிக்காது நைனா. தேர்தல் முடிவுதான் பதில் சொல்லும். சொல்லிப்புட்டேன் சாமி!
**ஆதம்பாக்கம், வே.முருகேசன்**

✉ ஜெயலலிதாவின் சலுகை - செலவு புள்ளி விவரப் பட்டியல் புல்லரிக்க வைத்தது.
**சென்னை-116, ஜே.துரைராஜு**

✉ இன்சுலின் இன்ஹேலர் வரமா, சாபமா?- அது இரண்டும் கலந்தது.
**சென்னை-73, கே.வி.ராமன்**




# ஸ்பீட் போஸ்ட்!



✉ 'உயிர்காத்த 1½ நிமிடம்!' படித்து ஆடிப்போயிட்டேன். எந்தப் பத்திரிகையிலும் இவ்வளவு விரிவான விஷயம் இதுவரை சொல்லப்படவில்லை!
**வியாசர்பாடி, சுகந்திநாராயன்**

ஆகிவிட்டது தான் வேதனை!
**ஈரோடு - 1, ரேவதிப்ரியன்**

✉ 'செந்திலின் பேட்டியைப் படித்தேன்; கவுண்டமணி இல்லாமலேயே சிரிக்க முடிந்தது.'
**நெய்வாசல், வி.எஸ்.விஜயமாறன்**

✉ பெரிய பரிசு கொடுக்கும் சின்ன ஜோக்குகளை, சித்திரங்களுடன் படிக்கும் பொழுது குஷி இரண்டு மடங்கானது!
**மதுரை, என். பாலகிருஷ்ணன்**

# இரண்டு மடங்கு குஷி!

✉ 'குலதெய்வம்' சிறுகதை ஆரம்பத்தில் இதயம் கனத்தாலும், முடிவில் மிகவும் இலேசாகிப் போனது.
**சென்னை-91, ஆர்.புஷ்பா**

✉ நடிகர் செந்தில் போன்றவர்கள், இந்திய அரசியலில் தனியிடத்தைப் பெற்றுள்ள கருணாநிதி போன்றவர்களை 'ஒண்டிக்கு ஒண்டி மோதட்டும்' என சவால் விட்டு பேட்டி கொடுக்கும் அளவுக்கு இன்று அரசியல்




✉ அமரர் கல்கியின் 'அவலட்சணப் போட்டி' கட்டுரை, மிக அருமை. 'அழகு என்பது கடவுள் அளிக்கும் வரப்பிரசாதம். அழகுப் போட்டி பரிசை, கடவுளுக்கு அல்லவா கொடுக்க வேண்டும்?' என்ற வரிகள், அர்த்தமுள்ளவை!
**வேலூர்-6, கே.கஸ்தூரிகதிர்வேல்**

✉ அழகிகளுக்கு போட்டி வைத்துப் பரிசளிப்பதில் என்ன கோளாறு? இன்

றைய தலைமுறை இந்த மாதிரி போட்டிகளை வரவேற்கின்றன என்பது நடப்பிலிருந்தே தெரிய வில்லையா? நாட்டுமக்கள் இதற்குச் சிறிதும் ஆதரவுகாட்ட மாட்டார்கள் என்ற கல்கியின் நம்பிக்கை என்றோ தகர்ந்து போன நிலையில் இக் கருத்தை வெளியிட்டிருப் பதில் அர்த்தமே இல்லை!

சென்னை-20, அடையாறு சேதுராமன்



✉ 'ஒவ்வொரு இல்லமும் சிறந்த முதியோர் இல்லமாகத் திகழ வேண்டும்' என்ற தராகவின் பதில் கலங்கித் தவிக்கும் முதியோர்களின் கண்ணீர் துடைக்கும் ஆறுதல் மொழி.

உசிலம்பட்டி, எஸ்.கருணையானந்தம்

**கல்கி 19.02.06 தலையங்கம் குறித்து...**

✉ மும்பை பங்குச் சந்தையின் 30 நிறுவனங்களை மும்பை பங்குச் சந்தை நிர்வாகிகள் அப்போர் தைக்கப்போது மாற்றிக்கொண்டு வருகிறார்கள். ஆரம்ப காலத்தில் 1978 - 79-ல் இருந்த 30 நிறு வனங்களுள் தற்போது 8 நிறுவனங்கள்தான் உள்ளன. 22 நிறுவனங்கள் நீக்கல், சேர்த்தல் முறையில் இடம் பெற்றிருக்கின்றன. இந்த 22 புதிய நிறுவனங்களுள் தகவல் தொழில்நுட்ப தொடர்பு நிறுவனங்கள் கணிசமான அளவில் இருக்கின்றன. மும்பை சென்செக்ஸ்-ல் உள்ள 30 நிறுவனங்களில் ஒன்று இரண்டைத்தவிர மற்ற எல்லா நிறுவனங்களும் (சுமார் 28) தேசிய பங்குச் சந்தையின் குறியீட்டு எண்கள் மதிப்பிற்குள் அடங் கும். (கல்கி தலையங்கத்தில் 30 சென்செக்ஸ் நிறுவனங்களும் 50 நிஃப்டி நிறுவனங்களுமாக மொத்தம் 80 நிறுவனங் களின் வளர்ச்சி இந்திய பொருளாதார வளர்ச்சி ஆகாது என்று குறிப் பிட்டுள்ளீர்கள். உண் மையில் இவை 50 நிறு வனங்கள்தான். (52 என் றும் வைத்துக் கொள்ள லாம்.)

சென்னை - 20, வி.கோபாலன்



# வட்டமேஜை



**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு நிறமும் உங்கள் மேன்மைக்கு

தேசிய முற்போக்கு திராவிட கழகத்தில் தெரிந்த இரண்டு முகங்கள், விஜயகாந்தும், பண்ருட்டி ராமச்சந்திரனும்தான். இவர்கள் இருவரும் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் அதிரடியாகப் பொதுக் கூட்டம் நடத்தி கலக்கிக் கொண்டிருக்கிறார்கள். பிஸியாகச் சுற்றிக் கொண்டிருக்கும் பண்ருட்டியாரை மடக்கினோம்.

# "பிச்சை எடுத்தாவது கட்சி நடத்துவோம்!"

**எம்.ஜி.ஆரைத் தவிர, கட்சிகள் துவக்கிய நடிகர்கள் துவண்டு போனது தான் தமிழ்நாட்டின் வரலாறு. இந்தச் சூழலில் விஜயகாந்தின் எதிர்காலத்தை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

"கலைஞரும் ஜெயலலிதாவும் நாசமாக்கிவிட்ட தமிழகத்தை, யாராவது ஒரு நல்லவர் வந்து காப்பாற்ற மாட்டாரா என்ற ஏக்கம் மக்களிடையே இருக்கிறது. எனவே சரியான நேரத்தில் வந்திருக்கிறார். ஜாதி மதத்தைத் தூண்டி அரசியல் நடத்திவந்த இந்த இருவர் மத்தியில் தமது அமைப்பை 'எல்லோருக்கும் பொதுவான அமைப்பு' என்று அறிவித்திருக்கிறார் விஜயகாந்த். எந்த ஒரு அரசியல் பாவமூட்டையையும் (political liability) சுமக்காமல், புத்துணர்வோடு இருக்கும் விஜயகாந்த், புதிய தலைமுறை இளைஞர்களைக் கவர்ந்திருக்கிறார். எங்கு போனாலும் 'கறுப்பு எம்.ஜி.ஆர்' என்று மக்கள் அவரைச் சூழ்ந்து கொள்கிறார்கள். எதிர்காலத்தில் மக்கள் அவர் பின்னால் செல்வார்கள் என்பது என் கணிப்பு."

**நீண்ட அரசியல் அனுபவம் பெற்ற நீங்கள், நடிகர் துவங்கிய கட்சியில் இணைந்தது பற்றி...**

"என் அனுபவத்தில் மூன்றாவது தலைமுறை அரசியல்வாதிகளுடன் இப்போது பழகிக் கொண்டிருக்கிறேன். நான் கற்ற கல்வியும், பெற்ற அனுபவமும் பயன்பட வேண்டும் என்ற உந்துதலால் தான் விஜயகாந்த் கட்சியில் சேர்ந்தேன்."

**உங்கள் யோசனைகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றனவா?**

"புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆரைப் போல - ஏன் இன்னும் ஒருபடி அதிகமாகவே என்னைக் கண்ணியத்துடன் நடத்துகிறார். மேடைகளில் ஆயிரம் பேசினாலும், என்னைக் கலக்காமல் ஏதும் பேச மாட்டார்."

**தி.மு.க - அ.தி.மு.க இரண்டு கட்சிகளையும் நிராகரிக்கும் அவர் பேச்சில் தி.மு.க மீதான தாக்குதல் கொஞ்சம் அதிகமாக இருக்கிறதே! 'ஜெ.'வைக் கண்டு பயமா?**

'மக்கள் ஒத்துழைப்போடு ஒரு புதிய சமுதாயத்தைப் படைக்க விரும்புகிறோம். கலைஞர் - 'ஜெ' லாவணிக்குள் நாங்கள் சிக்கிக்கொள்ள விரும்பவில்லை. விஜயகாந்த் பேசுவதற்கு தி.மு.க.வில் பதில் சொல்வதால், அவர்களைப் பற்றி அதிகம் பேசுவது போலத் தெரிகிறதே தவிர, அ.இ.அ.தி.மு.கவையும் சாடுகிறார். யாரைக் கண்டும் எங்களுக்குப் பயம் இல்லை."

**சினிமா நடிகர்களுக்கும் கறுப்புப் பணத்துக்கும் உள்ள தொடர்பு ஊரறிந்தது. இந்த நிலையில் விஜயகாந்த் ஊழலைப் பற்றிப் பேசுவது சரிதானா?**

"இதில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. சொந்தத் தொழில் ரீதியாகச் சம்பாதிக்கும்போது கணக்கில் வராத பணத்தைக் கையாள்வது ஒன்று; அரசியல் கட்சிகள் பொறுப்பில் இருக்கும்போது, மக்களின் வரிப்பணத்தைக் கையாளும்போது வரும் கணக்கில் வராத பணம் ஒன்று. ஒருமுறை எம்.ஜி.ஆரோடு இது பற்றிப் பேசும்போது சொன்னார். 'நடிகர்கள் ஓஹோ என்று இருக்கும்போது பணம் கிடைக்கிறது. ஆனால் மார்க்கெட் போன பிறகு

சிந்துவாரில்லை. அந்தச் சமயத்தில் கஞ்சிக்குத் திண்டாடுகிறார் நடிகர். கஷ்ட காலத்தில் உதவும் என்பதற்காகத் தான் முதலில் வருமானவரியை மறைக்கிறார்கள். நலிவுற்ற கலைஞர்களுக்கு உதவுவதற்கு அரசு தயாராக இருக்குமானால் ஏன் வருவாயை மறைக்க வேண்டும்?" என்றார்.

இது சுயதொழில் செய்யும் அனைவருக்கும் உள்ள பிரச்னைதான்! ஆனால் மக்கள் வரிப் பணத்தில் கொள்ளையடித்து, கோடி கோடியாகச் சேர்த்து விட்ட நமது முக்கிய அரசியல் தலைவர்களோடு யாரையும் ஒப்பிட முடியாது."



தனித்தே 234 தொகுதிகளிலும் நிற்போம் என்று விஜயகாந்த் கூறுகிறார். சாத்தியமா?

"தமிழகத்தைப் பாழாக்கிக் கொண்டிருக்கும் இந்த இருவரையும் அகற்ற வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கும் நாங்கள் இரு அணிகளில் ஏதாவது ஒன்றில் சேர்ந்து 'இவர்தான் முதல்வர்' என்று எப்படிப் பேச முடியும்? வெற்றி தோல்வி பற்றிக் கவலை இல்லை; மக்கள் எந்தத் தீர்ப்பை அளித்தாலும் ஏற்றுக் கொள்கிறோம். எந்தக் கட்சியுடனும் கூட்டணி சேரவோ, சேர்க்கவோ மாட்டோம்' என்று விஜயகாந்த் தெளிவாகவே கூறியிருக்கிறார். ராமதாஸ் மற்றும் வைகோ போல் கூட்டணி சகதியில் சிக்கிக்கொண்டு அழிவதில் அர்த்தமேயில்லை."

இன்றைக்கு அரசியலுக்கு வரும் இளைஞர்கள் சமுதாய நோக்கத்தை விட ஏதாவது சம்பாதிக்கும் நோக்கத்தோடுதான் வருகிறார்கள். அப்படியிருக்க தனித்து நின்று தோல்வியைத்

## பண்ருட்டி 'பரபர' பேட்டி!



"உங்க படத்துக்கு ஒத்த எழுத்துல டைட்டில் வச்சுருக்கீங்களே... எதுக்கு?"

"டைட்டில்லயே சென்சார் இரண்டு இடத்துல வெட்டின தால மீதி ஒரு எழுத்துதான் மிஞ்சுச்சு!"

- அம்பை தேவா

**தழுவினால் அவர்கள் விஜயகாந்துடன் தொடர்ந்து இருப்பார்களா?**

"ஆதாய அரசியல் என்றால் விஜயகாந்த் அரசியலுக்கே வந்திருக்க வேண்டியதில்லை. விஜயகாந்த் கூட்டங்களில் பேசும்போது 'கூட்டணி வேணுமா' என்று கேட்டால் 90 சதம் பேர் வேண்டாம் என்றுதான் சொல்கிறார்கள். எனவே தோல்வி காரணமாகத் தொண்டர்கள், இளைஞர்கள், சோர்வடைந்து ஓட மாட்டார்கள். எங்களுக்கும் எதிர்காலம் உண்டு."

**தேர்தலுக்குப் பிறகு விஜயகாந்த் கட்சியைக் கலைத்துவிடுவார் என்றும் சிலர் கிண்டலடிக்கிறார்களே?**

"சொந்த சொத்துக்களை விற்று கட்சி நடத்துகிறார் விஜயகாந்த். ஒரு நல்ல குறிக்கோளுடன், சுயநலம் கலக்காத, இதய சுத்தியோடு மக்களுக்குத் தொண்டாற்ற வந்திருக்கிறார். ஆனால் கல்யாண மண்டபத்தைக் காப்பாற்ற கட்சி என்று கொச்சைப்படுத்துகிறார்கள் சிலர். இதற்கெல்லாம் கவலைப்படாமல் மக்களது நம்பிக்கையைக் காப்பாற்றும் வண்ணம் பிச்சையெடுத்தாவது இயக்கத்தை நடத்துவோம்."

**"இப்படி நீங்கள் தனி அணியாக நிற்பதால், வோட்டுக்கள் பிரியும். இது யாருக்கு லாபம் என்று நினைக்கிறீர்கள்?"**

"நாங்கள் எத்தனை வோட்டுகள் வாங்குவோம்; யாருடைய வோட்டுக்களைப் பிரிப்போம் என்பதற்கெல்லாம் இப்போது பதில் சொல்ல முடியாது. எங்கள் ஆதரவுத் தளத்தைப் பரிசோதித்துப் பார்க்கும் கட்டத்தில் நாங்களிருக்கிறோம்."

**விஜயகாந்துடன் கூட்டணி சேர்ந்தால் ஏழு கட்சி கூட்டணியை எதிர்ப்பது சுலபம் என்ற நோக்கத்தில் விஜயகாந்துக்கு ஜெ. தரப்பிலிருந்து பிரஷர் வருகிறது என்கிறார்களே!**

"தி.மு.க, அ.தி.மு.க இரண்டையும் தமிழக அரசியலில் இருந்து ஓரம் கட்ட களம் இறங்கியிருக்கும் நாங்கள், அரசியல் ஆதாயத்துக்காக ஒரு சார்பு நிலையை எடுத்தால் எங்கள் நம்பகத்தன்மை பலியாகிவிடும். வெற்றி தோல்வி பற்றிக் கவலைப்படாமல் தனித்தேதான் தேர்தலைச் சந்திக்கப் போகிறோம்."

**அரசியலில் எதுவும் சாத்தியம் என்ற அடிப்படையில், விஜயகாந்த் ஜெயலலிதாவோடு கூட்டணி அமைக்க முடிவு செய்துவிட்டால் உங்கள் நிலை?**

"கட்சி எந்த முடிவெடுத்தாலும், அதன்படி நடப்பேன். தனிப்பட்ட முறையில் ஜெயலலிதாவிடமும் கலைஞரிடமும் எந்த விருப்போ, வெறுப்போ கிடையாது."

**நடிகர் சங்கத் தலைவராக இருக்கும் விஜயகாந்தின் கட்சியில் சேராமல் பல நடிகர்கள் அ.தி.மு.கவில் சேர்கிறார்களே?**

"அதுவும் நல்லதுதான். நடிகர்கள், இவருடன் வந்து இணைந்தால் 'நடிகர் கட்சி' என்று சொல்வதை விட்டு 'நடிகர் சங்க கட்சி' என்று அல்லவா முத்திரை குத்தி விடுவார்கள்?"

**- ப்ரியன்**

படம்: **மீடியா ராமு**



MAGAM
MASALA



• ரசிக வோட்டுகள்!



• நிழலில் தவளை!

● **ஆர்.பாலகிருஷ்ணன், சென்னை - 10**

**? ஜெயலலிதா பிறந்த நாளன்று, அவர் வருமான வரி வழக்கில் ஆஜராகாமல் 42 வாய்தா வாங்கியதை உச்சநீதிமன்றம் இடித்துரைத்துள்ளதே?**

! கண்டனம் தெரிவித்தது சரிதான். ஆனால் இப்படியெல்லாம் வழக்குகளை இழுத்தடிக்காமல் துரிதமாக முடிக்க என்ன செய்யவேண்டும். அதில் யாரும் கவனம் செலுத்தி நிலைமையைத் திருத்த முயற்சி மேற்கொள்ளக் காணோமே!

● **ஆர்.ரங்கநாதன், சென்னை - 17**

**? அமெரிக்க அதிபர் புஷ் விஜயம்?**

! அணு உலை டெக்னாலஜி ஆபத்தானது என்பதால் மின் உற்பத்திக்கு வேறு முறைகளில் விஞ்ஞானிகள் தீவிர கவனம் செலுத்தி வருகின்றனர். இந்தியாவில் அணுசக்தி டெக்னாலஜி பெறுவதற்காக நமது பாதுகாப்பு முயற்சிகளில் அமெரிக்க மேற்பார்வையை அனுமதித்ததன் மூலம் நாம் ஏற்கெனவே படுதோல்வி அடைந்து விட்டோம். புஷ், இங்கு வருவதற்கு முன்பே வெற்றி பெற்றுவிட்டார். மேலும் பாகிஸ்தானிடம் பணிந்து போய் காஷ்மீர் விஷயத்தில் கண்துடைப்பு நாடகம் நடத்தி நம்மை ஏமாற்றி விட்டார்.

● **முகவை முத்துசாமி, தொண்டி**

**? சமீபத்தில் ரசித்தது எது?**

! கருவாச்சி காவியத்தில் 'காலம்' பற்றி கவிஞர் வைரமுத்து எழுதியிருந்த வரிகள். காலம் கடந்தும் நிற்கும்!

● **ஜெ.துரைராஜ், சென்னை-116**

**? தார் எக்ஸ்பிரஸ், 41 வருடங்களுக்குப் பிறகு இந்தியா பாகிஸ்தான் ரயில் இணைப்பு மூலம் அதன் நல்லுறவில் சரித்திரம் படைத்துவிட்டதே?**

! நாற்பத்தொரு வருடங்களுக்குப் பிறகு ஓடியது சரித்திரம்தான். ஆனால் நல்லுறவு என்பது ரயிலோட்டத்தால் விளைந்து விடுவதில்லை. இவையெல்லாம் மேல் பூச்சு விஷயங்கள். நல்லுறவு கட்டடம் பலவீனமாகவே உள்ளது. பழுது பார்க்கப்படவேண்டும்.

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

**? "பகைப்படை (அ.தி.மு.க) நடுங்க வேண்டுமானால், பண்பாடு குறையாமல் பாம்பு போல் சீறிக் காட்ட வேண்டும்" என்று மு.கருணாநிதி கூறியுள்ளது பற்றி...?**

! அட கடவுளே! அப்படியானால் விஷப் பாம்பு எடுத்த படத்தின் நிழலில் ஒதுங்கிய தவளையின் கதையை வைகோ சொல்லியிருக்கிறாரே... அதற்கென்ன அர்த்தம்!

● **கே.வி.ராமன், சேலையூர்**

**? குஜராத் மாநில பெஸ்ட் பேக்கரி வழக்கில் மும்பை சிறப்பு நீதிமன்றம் ஒன்பது பேருக்கு ஆயுள் தண்டனை வழங்கியுள்ளதே?**

! தாமதமாக வந்தாலும் உறுதியான தீர்ப்புதான்.

• கண்டன 42!





• சீறும் யோசனை!



• கருவாச்சி காலம்!



• ஜெயம் - விஜயம்!

# நீங்கள் கேட்டவை - தராசு

குஜராத்திலிருந்து மும்பைக்கு வழக்கை மாற்றி மறு விசாரணை நடத்த உத்தரவிட்ட உச்சநீதி மன்றத்துக்கு நன்றி தெரிவிக்க, சட்டம் ஒழுங்கை மதிக்கும் அனைவருமே கடமைப்பட்டுள்ளோம்.

● சிவராமசுப்பிரமணியன்,
தூத்துக்குடி - 2

***? சி.டி.ஸ்கேன், எம்.ஆர்.ஐ ஸ்கேன் போன்ற மருத்துவ பரிசோதனை கருவிகள் உள்நாட்டிலேயே தயாரிக்கப் படும் என்கிறாரே அன்புமணி? இவை தரமாக அமையுமா?***

! ஏற்றுமதி நோக்கில் ஒப்பந்தம் செய்து தொழிலகம் அமையுமானால் உற்பத்திப் பொருளின் தரமும் உலகத் தரத்துக்கு உயர்ந்தே தீர வேண்டும்.

● எல். மீனாட்சிசுந்தரம், திருவண்ணாமலை

***? தமிழக அரசின் 'டாஸ்மாக்' கடைகளில் கிரெடிட் கார்ட் வியாபாரம் சிறப்பா? வெறுப்பா?***

! இரண்டுமில்லை; - நெருப்பு! அந்த 'வசதி'யை உபயோகிக்கும் நபரின் குடும்ப நலனுக்கு வைக்கப்பட்ட நெருப்பு.

● என். சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர் ●

***? சீட்டுகளுக்காக அணி மாறும் கட்சித் தலைவர்களால் நாட்டு மக்களுக்கு நன்மை செய்ய முடியுமா?***

! பிளாஸ்டிக் குடத்துக்காக வோட்டுப் போடும் மக்களால் உரிமைகளைக் கேட்டுப் பெற முடியுமா?

● ஆர். ராஜதுரை, சீர்காழி

***? காதலர் தினம் இந்திய பண்பாட்டுக்கு விரோதமானது, கலாசார சீரழிவை ஏற்படுத்துகிறது என்னும்போது, கல்கி காதல் சிறப்பிதழ் வெளியிட்டது சரியா?***

! இந்திய பண்பாடு காதலை எவ்வளவு உயர்வாகக் கொண்டாடுகிறது என்பதற்கு திருக்குறள் தேவார - திருவாசகம் பாசுரங்கள் போன்ற தமிழிலக்கியங்களில் கையாளப்படும் உயர் காதல் பாவமும் அதற்கும் முந்தைய சங்கத் தமிழ் கால காதல் கவிதைகளும் சான்றாக விளங்குகின்றன. 'செம்புலப் பெயல்நீர் போல அன்புடைநெஞ்சம் தான் கலந்தனவே'- இத்தனை அழகான, ஆழமான வரிகள் வேறெந்த மொழியில், கலாசாரத்தில் உண்டு? எனவே, கல்கி காதலைக் கொண்டாடுவது பாரம்பரியத்



• பதித்த பத்து

## காங்கிரஸில் கோஷ்டியே இல்லையாமே..?

**☐ ரூ.100/- பரிசு பெறுபவர்:**

ஆர். ரங்கநாதன்,
A 1, 'சுபோதயா',
28, (15-16) கோபாலகிருஷ்ணா
ரோடு, சென்னை - 600 017

**✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:**

என். சங்கரதாஸ்,
24, மஞ்சப்பூத் தெரு,
ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 125

துக்கு விரோதம் அல்ல.

● எஸ்.கௌரி லக்ஷ்மி, ஸ்ரீரங்கம்

? தற்போது விரக்தியில் இருக்கும் அரசியல்வாதி யார்?

! பா.ஜ.க.வினர்தான். அதனால்தான் விரக்தி அடைந்தவர்களின் வாக்குகள் எங்களுக்கு விழும் என்று பேசி வருகிறார்கள்.

● கே. மூர்த்தி, குட்டலாடம்பட்டி

? அஞ்சலக மாதாந்திர வருவாய் திட்டத்துக்கு 10 சதவிகிதம் போனஸ் ரத்து குறித்து...?

! மொத்தமாக ஒரு தொகை செலுத்திவிட்டால் வட்டியை மாதா மாதம் பெற்றுக் கொள்ளலாம்; தொகை முதிர்வடையும்போது 10 சதவிகிதம் கூடுதலாகக் கிடைக்கும் என்ற சலுகை, ஏற்கெனவே முதலீடு செய்தவர்களுக்குத் தொடரும். புதிதாக முதலீடு செய்வோருக்கு, பத்து சதவிகித கூடுதல் சலுகை மட்டும் கிடையாது. பசியின் பசிக்கு முடிவு ஏது? சட்டைப் பையில் சாமர்த்தியமாகச் சலுகை திணித்து, பேண்ட் பாக்கெட்டிலிருந்து உரிமையோடு உருவிக் கொள்வார்.

● வீ.முத்தையா, திருநெல்வேலி டவுன்

? கௌரவமான அளவு தொகுதிகள் என்றால் எவ்வளவு?

! கலைஞரால் கொடுக்க முடியாத

# சின்ன ஜோக்; பெரிய பரிசு!

**வாரம் ஒரு ஜோக் போட்டி!**

**போட்டி - 9**

**எழுதுங்க... போலீஸ் ஜோக்ஸ்!**

**பளீர் ஜோக்குக்கு...**

**பிரஷர் குக்கர்!**



வழங்குபவர்கள்:



✱ 'போலீஸ் ஜோக்ஸ்'னு குறிப்பிட்டு அஞ்சலட்டையில் மட்டுமே எழுதி, கல்கி முகவரிக்கே அனுப்புங்க.
✱ முகவரியோடு உங்க தொடர்பு எண்ணையும் எழுதுங்க.
✱ ஓர் அட்டையில் ஒரு ஜோக் மட்டுமே எழுதவும்.
✱ ஆசிரியர் தீர்ப்பே இறுதி. ✱ கடைசி தேதி : 13.3.2006

அளவும், கூட்டணிக் கட்சிகளால் பெற முடியாத அளவும் கொண்ட எண்ணிக்கைக்குத்தான் கௌரவமான தொகுதிகள் என்று பெயர்.

**● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்**

***? ஜெயலலிதா கலந்து கொள்ளும் அரசு விழாக்களில் பல மணி நேரம் காத்திருக்கும் பள்ளி மாணவிகள் மயங்கி விழுவது வழக்கமான நிகழ்வு. சென்னை விழா ஒன்றில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவரே மயங்கி விழுந்திருக்கிறாரே... இதற்கெல்லாம் முடிவே இல்லையா?***

! போலீஸ்காரர் மயங்கி விழுந்தால் அது கடமையாற்றும்போது - புரிந்து கொள்ளலாம். ஆனால், பள்ளி மாணவிகள் மயங்கி விழுமாறு ஒரு சூழ்நிலையை உருவாக்குவது ரொம்பத் தவறு. ஜெ.மயக்கம் தெளிந்து இதனைத் திருத்த உத்தரவு போடட்டும்.

**● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்**

***? ஏழைகளுக்குக் குறைந்த கட்டணத்தில் ஏ.ஸி. வசதியுடனான ரயில் பயணத்துக்கு வழிசெய்துள்ள லாலுவின் ரயில்வே பட்ஜெட்...?***

! மேல்வகுப்பில் இடம் இருந்து, கீழ் வகுப்பில் இடம் இல்லாது போனால்; கீழ் வகுப்பு டிக்கெட்டைக் கொண்டு மேல் வகுப்பில் பயணம் செய்யலாம் என்பது லஞ்ச ஊழலுக்கு ஊற்றுக்கண்.

**● கவிதா ராஜேஸ்வரி, எசனை**

***? தமது 'ரசிகர்களை தி.மு.கவுக்கு வோட்டுப் போட நாம் வற்புறுத்துவதில்லை' என்கிறாரே சரத்குமார்?***

! சரிதான். "தி.மு.க. கூட்டணிக்கு வோட்டுப் போடுங்க"ன்னு தான் சொல்லணும். அப்படியும் சொல்ல மாட்டேன்னு பிடிவாதம் பிடித்தால், நஷ்டம் அவருக்குத்தான்; கூட்டணிக்கு இல்லை என்பதே யதார்த்தம்.

**● என். சண்முகம், திருவண்ணாமலை**

***? 'காங்கிரஸ் கட்சியில் கோஷ்டிகள் இல்லை; இருப்பதாகத் தெரியவில்லை. எல்லோரும் ஒத்துழைப்பு தருகிறார்கள்' என்று அதன் தலைவர் கிருஷ்ணசாமி கூறியிருப்பது...?***

! புது மாப்பிள்ளை பருத்திக் கொட்டை சாப்பிட்டுவிட்டுச் சப்புக் கொட்டின கதை தெரிந்திருக்குமே? கிருஷ்ணசாமி இப்போ புது மாப்பிள்ளை. போகப் போகப் புரிஞ்சுக்குவார். ●

# வா, வா, சிவாஜி!

"என்ன சந்தியா, 'வல்லவன்'ல நடிக்கிற சிம்பு, நயன்தாரா, ரீமாசென் எல்லாரும் சர்ச்சைகள்ல சிக்கித் தவிக்கும்போது நீங்க மட்டும் எதிலும் சிக்கிக்காம இருக்கிறது நியாயமா?" என்றால் உடனே, "ஏங்க, நான் சிவனேன்னு இருக்கிறது பிடிக்கலையாக்கும்" என்று செல்லமாய்க் காற்றிலேயே ஒரு 'டிஷ்யூம்' விட்டார் சந்தியா.



"காதல் படம் தொடங்கும்போது நான் பத்தாவது படிச்சுட்டிருந்தேன்னா இப்போ நான் என்ன படிக்கிறேன்னு கரெக்டா சொல்லுங்க பார்ப்போம்? ஹி... ஹி...ஹி... இப்பவும் அதே பத்தாவதுதான்! ப்ச்... ஷூட்டிங் நடுவுல படிக்கவே முடியலை. இனி மேல் ரெண்டு ரெண்டு பாடங்களா எழுதி பாஸ் பண்ணலாம்னு இருக்கேன்.

'டிஷ்யூம்'மில் ஃபைட் மாஸ்டர் எனக்கும் பல்டியடிக்கிறது, தலை கீழா நிக்கறது பற்றியெல்லாம் சொல்லித் தந்தார் தெரியுமா. ஆனா சீரியஸா கத்துக்காம சிரிச்சுட்டே இருந்தேன். கடைசியில அவருக்கு பெண்டு கழண்டு போச்சு.

மலையாளத்தில் 'ஆலிஸ் இன் வொண்டர்லேண்ட்' படத்துல நடிச்சேன். படம் சுமாராதான் போச்சு. அடுத்ததா தெலுங்குல பவன் கல்யாணோடு ஒரு படம் பண்றேன். டப்பிங் வாய்ஸ்தான். ஆனா 'டிஷ்யூம்'ல எப்படியாவது சொந்தக் குரல்ல பேசணும்னு நினைச்சேன். முடியலை. 'வல்லவன்'படத்துலயாவது தமிழக மக்கள் என் சொந்தக் குரலைக் கேட்கறதுக்கு சிம்புதான் அருள்பாலிக்கணும்.

புதுப்படங்களில் என்னோட உச்சகட்ட எதிர்பார்ப்புள்ள படம்னா அது சிவாஜிதான். நான் ரஜினி விசிறியும் கூட. எங்கிட்ட பெட் கட்டுறீங்களா ரஜினி–ஷங்கர் கூட்டணி கலக்கலா இருக்கப் போகுது' என்று திருவாக்கு அருள்னார்.

சரிங்க... சந்தியானந்தா

- ச.ந.கண்ணன்

# சின்ன ஜோக்; பெரிய பரிசு!

## போட்டி முடிவு-7




''எனக்கு தேர்தலில் நிற்க வேண்டும். ஜெயித்து எம்.எல்.ஏ., அமைச்சர் என்று பதவி வகிக்க வேண்டும் என்ற ஆசையோ, எண்ணமோ சிறிதும் இல்லை.''

(கூட்டத்திலிருந்து ஒருவர் எழுந்து)

''நீங்க அப்படியெல்லாம் ஆகணும்ங்கற எண்ணம், ஆசை எங்களுக்கும் கூட இல்லை தலைவரே...''

- கே.ஆனந்தன்,
தர்மபுரி

'அரசியல்வாதி ஜோக்ஸ்'ன்னதுமே, டெபாசிட் கிடைச்ச வேட்பாளர் மாதிரி பெருங்கொண்டாட்டத்துடன் கலந்துக்கிட்டு கலக்கிட்டீங்க!

*சிறப்பான அரசியல்வாதி ஜோக் எழுதி தூத்துக்குடி மெட்டல்ஸ், சென்னை வழங்கும் சூர்யா கேஸ்ஸ்டவ் பரிசாகப் பெறும் வாசகர் : நா.கோகிலன்*

''என்ன நம்ம தலைவர் நர்ஸரி ஸ்கூல் போய் பிள்ளைங்ககிட்ட வோட்டு கேட்டுக்கிட்டிருக்காரு?''

''2020-லதான் ஆட்சியைப் பிடிக்கிறதா சொல்லியிருக்காரு. அதனால இப்ப இருந்தே வோட்டு கேட்கறாராம்!''

- நா.கோகிலன்,
ஜோலார்பேட்டை

''ஏன், நம்ம கட்சி தலைமை அலுவலக வாசலை இடிச்சுப் பெருசாக்குறாங்க?''

''கூட்டணி பத்தி பேச வர்றவங்களுக்கு வசதியாதான்!''

- என்.பி.சாமி,
கடலூர்

''நேத்து, தலைவர் பேச இருந்த கூட்டத்துல ஒரே அடிதடி ரகளை. போலீஸ் வந்தும் கூட்டம் கலையலை!''

''ஐயையோ, அப்புறம்?''

''தலைவர் மைக்கைப் பிடிச்சதும் எல்லோரும் கலைஞ்சு ஓடிட்டாங்க!''

- பி.ராஜேஸ்வரி,
மதுரை



# கல்கி




2006 மார்ச் 12
பார்த்திப மாசி 28
மலர் : 64
இதழ் : 32


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## சிதம்பரத்தின் புன்னகை!

**ப.** சிதம்பரத்தின் பட்ஜெட்டுக்கு அவர் மனைவி நளினி சிதம்பரம், நூற்றுக்கு நூறு மார்க் தருவதில் ஆச்சர்யமில்லை. பிரதமர் இந்த பட்ஜெட்டைப் புகழ்ந்து தள்ளுவதில் வியப்பில்லை. ஆனால் எதிர்கட்சியினர் மட்டுமின்றி நாடெங்கிலும் உள்ள அறிஞர்களும் நிபுணர்களும்கூட இந்த பட்ஜெட்டை முழு மனத்தோடு வரவேற்கவில்லை.

வருமான வரியையும் கம்பெனிகளுக்கான வரியையும் உயர்த்தாததால் மட்டுமே ஒரு பட்ஜெட் சிறந்த பட்ஜெட் ஆகி விடாது. உற்பத்திப் பெருக்கத்துக்கும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் துணிச்சல் மிக்க முடிவுகள் எடுத்து செயல்படுத்த வேண்டும். அவ்வாறின்றி இந்த பட்ஜெட் தேர்தலை முன்னிட்டு வாக்காளர்களுக்குச் சோப்பு போடும் பட்ஜெட்டாகவே விளங்குகிறது.

திட்டச் செலவுகள் 1,72,728 கோடி ; திட்டத்துக்குட்படாத (non-plan) செலவுகள் 3,91,263 கோடி! கணக்கு போட்டு, பற்றாக்குறையானது மொத்த உற்பத்தி (GDP)யில் ஒரு மிகச் சிறிய சதவிகிதம் தான் என்று சமர்ப்பித்துவிட்டார் நிதி அமைச்சர். நிலைமை கட்டுப்பாட்டுக்குள் இருப்பதாகவும் பொருளாதாரம் தறிகெட்டுப் போகாது என்றும் உறுதி சொல்கிறார்.

ஆனால், பொருளாதார கோட்பாடுகள் வேறு ; நடைமுறை வேறு.

திட்டத்துக்குட்படாத செலவினங்கள் ஒரு புறமும் சமுதாய நலத் திட்டங்களுக்கென ஒதுக்கப்படும் லட்சக்கணக்கான கோடி கள் மறுபுறமுமாக நிதி நிலைமையைப் பெரிய சவாலுக்கு




உட்படுத்துகின்றன.

தேசிய கிராமப்புற வேலை வாய்ப்பு உத்தரவாத திட்டத்துக்கு ரூ.11,300 கோடி, விவசாய கடன் வினியோகத்துக்கென ரூ.1,41,500 கோடி ஒதுக்கீடு!

இவ்விரண்டு ஒதுக்கீடுகளும் லஞ்ச-ஊழலுக்கு இடங்கொடாமல் மக்களைச் சென்றடையுமா என்கிற சந்தேகம் ஒரு புறம்; இவை மக்களின் பிரச்னைகளை நிரந்தரமாகத் தீர்க்குமா என்ற அச்சம் மறுபுறம்.

வேலை வாய்ப்புகளை உருவாக்கவும் பெருக்கவும் எதுவும் செய்யாத பட்ஜெட்டில் வேலை வாய்ப்பு உத்தரவாத திட்டத்துக்கென்று நிதி மட்டும் ஒதுக்கப்படுவதால் என்ன பயன்? மக்களுக்குப் பணம் வேண்டுமானால் கிடைக்கலாம்; ஆனால் வேலை கிடைக்காது; உற்பத்தி பெருகாது.

விவசாயிகளுக்கு உதவி தேவை என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இந்தக் கடன் ஒதுக்கீடை வரவேற்றுள்ளார் விவசாய விஞ்ஞானி டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன். ஆனால், வெறும் கடன் வினியோகம் என்பது விவசாயிகளுடைய பிரச்னையை எவ்வாறு தீர்க்கும்? தெள்ளத் தெளிவான விவசாய கொள்கை வகுக்க தேசிய கமிஷன் ஒன்று நிறுவப்பட்டு ஆலோசனைகளை வழங்கியிருக்கிறது. 'விவசாய புனருத்தாரணம்; விவசாய சந்தைக் கொள்கை. சந்தைக்கான அடிப்படை வசதிகள் பெருக்கம் போன்றவற்றில் கவனம் செலுத்த இந்த கமிஷன் செய்துள்ள சிபாரிசுகளை நிதியமைச்சர் கருத்தில் கொள்ளவில்லை' என்பதையும் டாக்டர் எம்.எஸ்.சுவாமிநாதன் சுட்டிக்காட்டியுள்ளார்.

வாஜ்பாய் சுட்டிக் காட்டியிருப்பதுபோல், உற்பத்திக்கு உதவாத வகையில் வாரி இறைக்கப்படும் கோடிகள், பண வீக்கத்துக்கும் விலைவாசி உயர்வுக்குமே வழி வகுக்கப் போகிறது. இது போதாதென்று பன்னிரண்டு சதவிகிதமாக உயர்த்தப்பட்டு, மேலும் விரிவு படுத்தப்பட்டுள்ள சேவை வரி, சராசரி மக்களைப் பெரிதும் பாதிக்கும். ஊழலை வளர்க்கும். சிறு தொழில் அதிபர்கள், தங்களுக்கு இந்த பட்ஜெட்டில் எதுவுமே இல்லை என்று ஆதங்கப்படுகின்றனர். பெரிய நிறுவனங்கள் ஃப்ரிஞ் பெனிஃபிட் டாக்ஸ் விஷயத்தில் நிதி அமைச்சர் காட்டும் பிடிவாதத்தில் நொந்து போயிருக்கின்றன.

மொத்தத்தில் பட்ஜெட்டை சமர்ப்பிக்க வந்த சிதம்பரத்தின் முகத்தில் காணப்பட்ட புன்னகையை, சராசரி இந்தியனின் முகம் பிரதிபலிக்கப் போவதில்லை. ●

# கலர் கலரா தங்கம்!



நம்ம சென்னை டிரேட் சென்டர் இருக்கே... அது போன வாரம் முழுக்க இட்டத்தட்ட சினேகாவாவே மாறி, 'ஜொலிக்குதே... ஜொலி ஜொலிக்குதே'ன்னு பாட்டுப் பாடிக்கிட்டு இருந்துச்சுங்க... ஏன்... என்னாச்சாம்? வேற ஒண்ணுமில்லே... அங்க போன வாரம் ஒரு 'தங்க நகை கண்காட்சி' நடந்துச்சு!

கண்காட்சி ஹாலுக்குள்ள நுழையறதுக்கே செக்யூரிட்டி பார்ட்டிங்க பாடாய்ப் படுத்திட்டாங்கப்பா... ஒரு வழியா உள்ளே போனா,; சும்மா 'ஜகஜக'ன்னு ஜுவல் வேட்டை செய்ய வந்தா மாதிரி இருந்துச்சு... பல பேருக்கு மயக்கமே வந்துட்டதாம். நாமும் எத்தனையோ மாடல்ல செயின், நெக்லஸ், பிரேஸ்லெட், மோதிரம் பார்த்திருப்போம். ஆனா அங்கே ஷோ கேஸ்ல வைச்சிருந்தாங்க பாருங்க... அப்போதான் 'ஏண்டா நாமெல்லாம் பில்கேட்ஸ் பரம்பரைல பிறக்கலை'ன்னு வருத்தமா இருந்துச்சு.

சுத்திச் சுத்தி பார்த்துட்டே இருந்தப்போ திடீர்னு ஒரு ஸ்டால் நம்மை கொக்கி போட்டு இழுத்த மாதிரி இருந்தது. கடை பேரு கே.பி. சங்கவி குரூப். நம்மூர்ல மஞ்சள் கலர் தங்கம் தான் பார்த்திருக்கோம். ஆனா இங்க கலர் கலரா தங்க நகைகள்...

என்ன... ஏதுன்னு அங்கிருந்த அமீத் ஜோஷி கிட்ட கேட்டோம்.

"எங்ககிட்ட வெள்ளை, பிங்க், பச்சை, மஞ்சன்னு நாலு கலர்ல தங்க நகைகள் இருக்கும். இப்போ சமீபகாலமா இது மாதிரி கலர் தங்க நகைகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கு. இட்டத்தட்ட எங்ககிட்ட ஆயிரத்து ஐந்நூறு டிசைன்கள்ல நகைகள் இருக்கு. சென்னைப் பெண்களின் நகை ஆர்வம் ரொம்ப உற்சாகப்படுத்தியிருக்கு. இனிமே கலர் தங்க நகைகளுக்குத்தான் எல்லாரும் சிவப்புக் கம்பளம் விரிக்கப் போறாங்க" என்று சிரிக்கிறார் அமீத் ஜோஷி.

எல்லாத்தையும் சுற்றிப் பார்த்த பிறகுதான் எனக்கு ஒரு சந்தேகம். இங்க எங்கேயாவது நம்ம ஆதிகேசவன் ஜாமீன்ல வந்திருப்பாரோன்னு... ஆனா வரல!

- முத்து

# “மண மகிழ்ச்சியே போதும்!”

சக்சஸ் ஸ்டோரி

## வசந்தம் மறுமண மையம்

வசந்தின் வெற்றியை, கோடியிலோ லட்சங்களிலோ கணக்கிட முடியாது. அதை விடவும் உயர்ந்தது, பத்தாயிரம் பெண்களின் மறுமணம் அல்லவா! இந்தப் புரட்சியை தனியொரு ஆளாய் மிகுந்த போராட்டங்களுக்கிடையில் நிகழ்த்திக் காட்டி வருகிறார் 'வசந்தம் மறுமண மைய'த்தின் நிறுவனரான வசந்த்.

"என்னுடைய ஊர் திண்டுக்கல்லுக்கு அருகில் உள்ள ஒட்டன்சத்திரம். அங்கு குலத்தொழிலே வட்டிக்குப் பணம் கொடுப்பதுதான். எனக்கும் இது தான் முழுநேரத் தொழில். ஒரு சமயம், கொடுத்த கடனை வசூலிக்கப் போய்க் கொண்டிருந்தபோது, சாலை விபத்தில் ஓர் இளைஞன் இறந்து கிடக்க, அவனது மனைவி உயிருக்குப் போராடிக் கொண்டிருந்ததைக் காண நேர்ந்தது. அடுத்த நிமிடமே, மருத்துவமனைக்கு அழைத்துச்சென்று எனது தங்கச் சங்கிலியை அடகு வைத்து அப்பெண்ணின் உயிரைக் காப்பாற்றினேன். அடமானம் வைக்கப்பட்ட சங்கிலியை பின்னர் மீட்கும்போது அப்பெண்ணின் குடும்பத்தோடு பழக நேர்ந்தது. கணவனை இழந்த பெண் தனித்திருக்கக் கூடாது என நானும் அவளது தந்தையும் மாப்பிள்ளை தேடினோம். ஆனால் ஒரு கைம்பெண்ணுக்கு மாப்பிள்ளை கிடைப்பதென்பது குதிரைக் கொம்பாக இருந்தது.

நீண்ட தேடல்களுக்குப் பிறகு அகதியாக தமிழகத்தில் நுழைந்த ஓர் இலங்கை வாலிபர்தான் அப்பெண்ணை மணக்க முன்வந்தார். அன்று காந்தி, 'போரில் கணவனை இழந்த வீரர்களின் மனைவிகளுக்கு இளைஞர்கள் வாழ்வு கொடுக்க வேண்டும்' என்று கட்டளையிட்டார். பிறகு பெரியாரும் குரல் கொடுத்தார். அந்த அறிஞர்கள் மறைந்தபின் கைம்பெண்களின் துயர் துடைக்க எவரும் வானத்திலிருந்துகூட குதிக்கவில்லையே என்று நான் மனம் வெம்பினேன்"



* வசந்த்

"இது என்னை உறுத்தவே வட்டித் தொழிலை விட்டுவிட்டு மறுமண மையத்தை 1990-ல் சென்னையில் ஆரம்பித்தேன். அது நெருக்கடியான கால கட்டம். என் பெற்றோர், மனைவி வீட்டார் உட்பட மொத்த சமூகமும் என்னைப் புறந்தள்ளியது. உறவினர்கள் தங்கள் வீட்டுத் திருமணங்களுக்குக் கூட என்னை அழைப்பதை நிறுத்தினர்.

நான் நடத்தி வைத்த முதல் மறு

மணமே என் உடம்பில் தழும்புகளை ஏற்படுத்தியது. ஒரு குடும்பத்தில் இரண்டாவது மகன் இறந்து போனான். கணவனை இழந்த பெண்ணுக்கு நான் மறுமணம் ஏற்பாடு செய்யத் துணிந்தேன். ஆனால், இறந்து போனவனின் சகோதரர் அந்தப் பெண்ணுக்கு மறுமணம் நடத்தினால் அவர்கள் பெண் எடுத்த வீட்டில் மதிக்க மாட்டார்கள் என்று அக்கிரமமாகப் பேசினார்கள். என்னை ஆயுதத்தால் தாக்கினர். அப்படியும் நினைத்ததை முடித்தேன். நாளடைவில் கணவனை இழந்த பெண்கள் என்னை, சகோதரனாகவே எண்ணி அவர்கள் துயரத்தை என் தோளில் ஏற்றினர். நீதிபதியாக எண்ணி என்னிடம் நியாயம் கேட்பார்கள். சில பெண்கள் 'நீங்கள் பத்து, இருபது வருடங்களுக்கு முன்பே இந்த மையத்தைத் தொடங்கியிருந்தால் நாங்கள் இன்றைக்கு அபலையாக இருந்திருக்க வேண்டியிருக்காதே' எனும் பொழுது என் கண்கள் கசியும்.

"உன்கிட்ட மாமூல் கேட்டது போலீஸ் இல்லனு எப்படிச் சொல்றே?"
"குடுக்கறதகுடு... போதும்னு வாங்கிக்கறோம்னு சொன்னாங்க!"

- அம்பை தேவா



98-ம் வருடம் வரை போராட்டமாக இருந்தது. மாதத்துக்கு ஆறுபேர் கூட வர மாட்டார்கள். இதை ஒரு சமூகப்பணியாகச் செய்வதால் கட்டணம் கட்டும்படி யாரையும் கட்டாயப்படுத்த முடியாது. சில பேர் சம்பந்தம் முடிந்த பின்பு எங்கே என்னிடம் சொன்னால் காசு கேட்டு விடுவேனோ என்று பதுங்கி, திருமணம் நடப்பதைக் கூட என்னிடமிருந்து மறைத்து விடுவார்கள்.

அதன்பின்பு ஊடகம் என்னை மக்களிடம் அடையாளப்படுத்தியது. மக்களுக்கும் நிறுவனத்தின்மீது நம்பிக்கை வந்தது. சட்டரீதியாக விவாகரத்து வாங்கியவர்களும், தங்கள் துணையின் இறப்புச் சான்றிதழ் வைத்திருப்பவர்களும் மட்டுமே எங்களிடம் பதிவு செய்து துணை தேட முடியும். இப்பொழுது தினமும் பத்துப் பேர் தேடி வரும் அளவுக்கு மக்களிடம் விழிப்புணர்ச்சியும் துணிவும் வந்திருக்கின்றன.

என் முயற்சியில் நான் சந்தித்த சம்பவங்களை, சவால்களை சில பத்திரிகைகள் தொடராக எழுதச் சொல்லின. ஆனால் அது பலரைக் காயப்படுத்தும், தர்மசங்கடமாக்கும் என்பதால் மறுத்து விட்டேன். என் சுயலாபம் இங்கு முக்கியமே அல்ல!"

"தற்போது மகளிர் சுயஉதவி குழுக்கள் மத்தியில் எங்களுக்கு நல்ல பெயர். இவர்கள் உதவியோடு மறுமண திட்டத்தை கிராம மூலை முடுக்குகளுக்கெல்லாம் கொண்டு செல்ல வேண்டுமென்றால், அதற்கு அரசாங்கத்தின் கருணைப் பார்வை அவசியம்" என்றவர் இறுதியாக, "என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு செருப்புத் தைக்கும் தொழிலாளி ஒருவர் முந்நூறு ரூபாய் கொடுத்தனுப்பினார். பிச்சை எடுத்து பிழைப்பு நடத்தும் ஒரு தொழுநோயாளி ஒருவரும் இருநூறு ரூபாய் கொடுத்து வாழ்த்தினார். இவர்களின் நம்பிக்கையைப் பொய்யாக்காமல் என் வாழ்நாள் முழுக்க சேவை செய்ய வேண்டும். லட்ச லட்சமாக சம்பாதிப்பதைவிட இதில் கிடைக்கும் மன மகிழ்ச்சியே போதும்" என்கிறார் நெகிழ்வுடன்.

**- ச.ந.கண்ணன்**

# கை கொடுக்குமா

* சினிமாவில் நடிக்கும் ஆத்தங்குடி மாளிகை

**கா**ரைக்குடி நகராட்சி - கல்லல் ஊராட்சி ஒன்றியம், சாக்கோட்டை ஊராட்சி ஒன்றியம் ஆகிய இரு ஒன்றியங்களுக்குள் சுமார் நானூறு கிராமங்கள் அடங்கியது காரைக்குடி சட்டமன்ற தொகுதி. 2001 தேர்தலில் தி.மு.க கூட்டணியில் அங்கம் வகித்திருந்த பா.ஜ.க வேட்பாளர் எச். ராஜா, சுமார் இரண்டாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்ற தொகுதி இது.

காரைக்குடி நகராட்சியும், கல்லல் ஊராட்சி ஒன்றியமும் தி.மு.க வசமும், சாக்கோட்டை ஊராட்சி ஒன்றியம்

தொகுதி விசிட் 7

* எச். ராஜா

# காரைக்குடி?

காங்கிரஸ் வசமும் இருந்து வருகின்றன. 1967க்குப் பின்னர் தி.மு.க.வின் கோட்டையாகவே விளங்கி வந்துள்ளது இந்தத் தொகுதி. காங்கிரஸ் தோழமையுடன் அ.தி.மு.க வேட்பாளர்கள் தோல்வி கண்டுள்ளனர். கடந்த சட்டமன்ற தேர்தலில் அ.தி.மு.க, காங்கிரஸ், த.மா.கா மற்றும் இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளின் கூட்டணி வேட்பாளரைக் காட்டிலும் அதிக வாக்குகள் பெற்று, தொகுதிக்குள் ஆழமாகக் காலூன்றி நின்றிடாத பா.ஜ.க கட்சியின் வேட்பாளர் வெற்றி பெற்றிட, நிரந்தரமான தி.மு.க வாக்கு வங்கியே காரணம் எனச் சொல்லப்படுகிறது.

96-ல் தி.மு.க கூட்டணியில் த.மா.கா வேட்பாளர் எம்.சுந்தரம் ஐம்பத்து மூவாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். ப. சிதம்பரம், காரைக்குடி சட்டமன்ற தொகுதியில் மட்டும் நாற்பத்தியிரண்டாயிரம் வாக்குகள் முன்னிலை பெற்றிருந்தார். தி.மு.க - காங்கிரஸ் கூட்டணி வைத்துக் கொள்ளும்போது வாக்கும் எண்ணிக்கையில் அசுர பலம் பெற்று விடுகிறது.



தமிழக சட்டமன்றத்திலேயே அதிக நேரம் எடுத்துக்கொண்டு பேசிய உறுப்பினர்களில் முதலிடம் பெற்றிருப்பவர் எச். ராஜா. (வார்த்தைக்கு வார்த்தை அம்மா புகழ் பாடினால், அஞ்சு நிமிடம் என்ன... அஞ்சு மணி நேரம்கூட சட்டசபைக்குள் பேசிக்கொண்டேயிருக்கலாம் என்கிறார் ஒரு தி.மு.க உடன்பிறப்பு!) ஐம்பது ஆண்டு காலமாக தூர்வாரப்படாமல் இருந்த காரைக்குடி கல்லுக்கட்டி பகுதி, கொப்புடையம்மன் கோயில் குளம், முத்துப்பட்டணம் முத்துமாரியம்மன் கோயில் பருப்பூரணி குளம் ஆகிய இரண்டும் எச். ராஜாவின் முயற்சியால் தூர் வாரப் பட்டிருக்கின்றன. காரைக்குடி அரசு மருத்துவமனையில் 2004லிருந்து ரத்த வங்கி ஒன்று செயல்பட்டு வருகிறது. (அதற்கு முன்னர் மதுரைக்குச் சென்றுதான் ரத்தம் பெற்று வரவேண்டும்.) சிவகங்கை மாவட்டத்தில் வேறெந்த அரசு மருத்துவமனையிலும் ரத்த வங்கி இல்லை.



• ஆதிபராசக்தி வார வழிபாட்டு மன்றம்

தொகுதிக்குள் எச். ராஜாவுக்கெதிராகப் பெரிய அளவில் புகார்கள் ஏதுமில்லை. ஆனால், பா.ஜ.க தனித்துப் போட்டியிடும் என்கிற தாற்காலிக அறிவிப்பு, தொகுதிக்குள் மீண்டும் அவர் வேட்பாளராகக் களமிறக்கப்பட்டால் எந்தளவுக்கு கை கொடுக்கும் எனத் தெரியவில்லை.

"இந்த ஐந்தாண்டு காலத்தில் அரசு நலத்திட்டங்கள் பலவற்றையும் தொகு



• எஸ்.வி. நாராயணன்



• மீனாட்சிசுந்தரம்

• துரை. கணேசன்

திக்குள் செயல் படுத்திக் காட்டியவர் எங்கள் எம்.எல்.ஏ., அதனால், எங்கள் கட்சி தனித்துப் போட்டியிட நேர்ந்தாலும் இந்தத் தொகுதியில் பா.ஜ.க வெற்றி பெற்று விடும்!'' என்று நம்பிக்கையுடன் பேசுகிறார் சிவகங்கை மாவட்ட பா.ஜ.க செயலாளர் குரு. நாகராஜன்.

தொகுதிக்குள் அவ்வப்போது அதிரடியாகக் களமிறங்கிச் செயல்பட்டதால் சர்ச்சைகளின் நாயகனாகவும் விளங்கி வந்துள்ளார் ஹெச். ராஜா. புதிய பேருந்து நிலையம் அருகே சூடாமணி நகர் பிரச்னை, தினசரி மார்க்கெட்டை அகற்றிவிட்டு அங்கு உருவாகி செயல்பட்டு வரும் ஆதிபராசக்தி வார வழிபாட்டு மன்ற விவகாரம் ஆகிய இரண்டு சர்ச்சைகளும் இன்னமும் இழுபறியாகவே இருக்கின்றன.

தினசரி மார்க்கெட்டில் வாழை இலை வியாபாரம் செய்து வருபவர் எஸ். சுகுமார். ''ப்ளஸ் டூ வரைக்கும் இலவச பாடப் புத்தகம், மாணவ - மாணவிகளுக்கு இலவச சைக்கிள். அதுவும் இந்த ஆறு மாசமா 'அம்மா' சும்மா அள்ளி விடுறாங்க. இரட்டை இலைக்குத்தான் என்னோட வோட்டு!'' என்கிறார் அவர்.

ஒரு நேர்காணலில் ஜெ. மூலமாக காரைக்குடி அ.தி.மு.க நகரச் செயலாளராக அங்கீகரிக்கப்பட்டவர் மெ. மீனாட்சி சுந்தரம். வீரையன் கண்மாய் அருகே புளியமரத்தடி அருகில் டீக்கடை வைத்து நடத்தி வருபவர். எளிமையான மனிதர். காரைக்குடி தொகுதிக்கு அ.தி.மு.க சார்பாக ஐம்பத்தி ஐந்து நபர்கள் தலைமையிடம் விண்ணப்பித்திருக்கின்றனர். இதில் முன்னாள் எம்.எல்.ஏ கற்பகம், மாவட்டப் பொருளாளர் எம். ராஜு, முன்னாள் நகரச் செயலாளர் ப. காளிதாஸ் ஆகியோர் முக்கியப் புள்ளிகள். ''நானும் தேர்தலில் போட்டியிட விண்ணப்பித்திருக்கிறேன். தமிழ்நாட்டிலேயே இரண்டு சக்கர வாகனம்கூட வைத்துக் கொள்ளுமளவுக்குப் பொருளாதார வசதியற்ற நகரச் செயலாளராக நான் ஒருவன் தான் இருப்பேன் என எண்ணுகிறேன்!'' எனக் கூறுகிறார் காரைக்குடி நகர அ.தி.மு.க செயலாளர் மெ. மீனாட்சி சுந்தரம்.

மருதுபாண்டி நகர் சார்லஸ்மேரிக்கு இரண்டு வயது பையன். கணவர் புருஷோத்தமன் (காதல் திருமணம்!) பெயிண்டர். ''யாருக்கு வோட்டுப் போட்டு என்னா ஆவப் போகுது? எம் புருஷன் வேலைக்குப் போனால்தான் என் வூட்டுல அடுப்பு எரியும். இருந்தாலும் நீங்க கேட்டதால சொல்றேன். எங்களோட வோட்டு எப்பவுமே தி.மு.க.வுக்குத்தான்!'' என்கிறார் சார்லஸ் மேரி.

இந்தத் தொகுதி தி.மு.க.வுக்கா, காங்கிரசுக்கா என்பது இன்னமும் விடுபடாத புதிராகவே இருந்து வருகிறது. மத்திய அமைச்சர் ப. சிதம்பரம், மகனுக்காக காரைக்குடி வேண்டுமெனக் கோருவதாகச் சொல்லப்படுகிறது. காங்கிரசுக்கு ஒதுக்கப்படும் பட்சத்தில் கார்த்தி சிதம்பரம் காரைக்குடியில் களமிறக்கப்படலாம்.

''காங்கிரசுக்கு காரைக்குடி ஒதுக்கப்படலாம் என நம்புகிறோம். தி.மு.க - காங்கிரஸ் கூட்டணி வேட்பாளர்களில் எவர் இங்கு களமிறங்கினாலும் வெற்றி உறுதி!'' என்கிறார் சிவகங்கை - இராமநாதபுர மாவட்ட ஐ.என்.டி.யு.சி பொதுச்செயலாளர் கே.கே. களஞ்சியம்.

தி.மு.க சார்பில் டிக்கெட் கேட்டு நாற்பது நபர்கள் விண்ணப்பித்திருக்கின்றனர். முன்னாள் அமைச்சர் தென்னவன், காரைக்குடி நகரச் செயலாளர் துரை. கணேசன், கல்லல் ஒன்றியச் செயலாளர் கரு. அசோகன், சாக்கோட்டை ஒன்றியச் செயலாளர் சுப. முத்துராமலிங்கம் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களில் முன்னாள் அமைச்சர் தென்னவனுக்கே வாய்ப்புகள் அதிகமெனக் கூறப்படுகிறது.

"இந்திராகாந்தி மற்றும் ராஜீவ்காந்தி படுகொலைகளை அடுத்து நடந்த தேர்தல்களில் மட்டுமே இங்கு



* சார்லஸ் மேரி

அ.தி.மு.க வெற்றி பெற்று வந்திருக்கிறது. அதைத் தவிர்த்துப் பார்த்தால், காரைக்குடி எப்போதுமே தி.மு.க.வின் கோட்டையாகவே இருந்து வந்துள்ளது. அதனால் எங்களது வெற்றி நிச்சயம்!'' எனச் சொல்கிறார் காரைக்குடி நகர தி.மு.க செயலாளர் துரை. கணேசன்.

''காரைக்குடி நகருக்குக் கிடைத்திருக்கும் 'சுப்பிரமணிய சுவாமி' இந்த எச். ராஜா. தொகுதி மக்களுக்கு அவர் எம்.எல்.ஏவாகச் செயல்படவில்லை. மாறாக சமூகப் பிரமுகர் வீர. லெட்சுமணன் மற்றும் பாத்திரக்கடை ராகவ அய்யங்கார் இருவருக்காக மட்டுமே செயல்பட்டவர் அவர். தற்போது இந்தத் தேர்தலில் போட்டியிடுவதில் திரிசங்கு நிலையில் தவிக்கிறார் எச். ராஜா'' எனக் கூறுகிறார் மாவட்ட தி.மு.க மீனவர் அணிச் செயலாளர் இலுப்பைக்குடி எஸ்.வி.நாராயணன்.



* குரு. நாகராஜன்

சிட்டிங் எம்.எல்.ஏ, எச். ராஜாவுடன் செல்லில் தொடர்பு கொண்டு பேசினோம். ''தேர்தலில் போட்டியிட திரிசங்கு நிலையில் தவிக்க வேண்டிய சூழல் எனக்கில்லை.



* எஸ். சுகுமார்



* கே.கே. களஞ்சியம்



* சட்டமன்ற உறுப்பினர் அலுவலகம்

ஏனெனில், பாரதிய ஜனதா கட்சியின் கட்சிப் பணிகளில் தீவிர தொண்டன் நான். கட்சித் தலைமையின் உத்தரவுப்படியேதான் நான் தேர்தல்களில் போட்டியிட்டு வந்துள்ளேன். கட்சியின் தலைமைதான் முடிவு செய்யும்'' என்று தெளிவாகப் பேசினார் அவர்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

ஆரணி யுவராஜ்

“என்னடா சிவா, தலைக்குக் குளிச்சியே. சரியா துவட்டிக்கலையா?”

சாப்பாட்டு மேஜையில் தட்டில் வெறும் இட்லிகளோடு அமர்ந்திருக்க, சட்னியுடன் வந்த அம்மா கேட்டாள்.

“துவட்டினேம்மா” என்றேன்.

“எங்கேடா துவட்டினே? பார்த்தாலே ஈரம் தெரியுதேடா” என்றவள், தலையில் கையை வைத்துப் பார்த்தாள்.

“அடிக்கிற வெய்யிலுக்கு ஆபீஸுக்குப் போறதுக்குள்ளே காய்ஞ்சுடும். நேரமாகுது. சட்னியை ஊத்தும்மா” என்றேன் பரபரப்புடன்.

அம்மா என்னுடைய அவசரத்தைக் கண்டு கொள்ளவே இல்லை. “டேய், இந்த மாதிரி சரியா துவட்டாம விடறதாலதான் அடிக்கடி தலைவலின்னு படுத்துக்கறே. ஏம்மா, வசந்தி இவனைப் பத்திதான் தெரியுமே நீயாவது கவனிக்கக் கூடாதா?” என்று சமையலறையைப் பார்த்துக் குரல் கொடுத்தாள்.

வசந்தி வேகமாக வெளிப்பட்டாள். “உங்ககிட்டேயே இப்படி சிடுசிடுக்கறாரு. நான் ஏதாவது சொன்னா மேலேயே பாய்ஞ்சு குதறிடுவாரு. ‘எனக்குத் தெரியாதா? மனுசன் அவசரம் புரியாம உயிரை வாங்காதேடி’ன்னு கத்துவார். அதனாலேதான் கண்டுக்கறதில்லை” என்றாள்.

“டேய், அப்புறம் சாப்பிடு. எழுந்து இப்படி வா. தலையைத் துவட்டி விடறேன்” என்றாள் அம்மா.

“அம்மா, விஷயம் புரியாமப் பேசாதே. இன்னிக்கு சனிக்கிழமை. சீக்கிரமா ஆபீஸுக்குப் போகணும். இப்பவே நேரமாயிடுச்சு. இதுக்குத்தான் நாளைக்கு தலைக்குக் குளிக்கறேன்னு சொன்னேன். நீதான் இன்னிக்கே குளின்னு சொன்னே” என்று சிடுசிடுத்தேன்.



“அதுக்காக ஈரத்தோடு போறேன்னு சொல்றியா? மடையா! எழுந்து வாடா இப்படி.” என்று அம்மாவும் சிடுசிடுத்தாள்.

# ஹாரிபாட்டரும் என் பிள்ளைகளும்!



"சை! இன்னிக்கு என் தாத்தாகிட்டே திட்டு வாங்கணும்னு இருக்கு" என்றபடி எழுந்து சென்றேன்.

அம்மா டவலுடன் என்னை நெருங்கினாள்.

"கொடு! நானே துவட்டிக்கறேன்" என்று கையை நீட்டினேன்.

"போதும்டா நீ துவட்டிக்கிட்ட லட்சணம். கிட்டே வா" என்றவள் துவட்டி விட ஆரம்பித்தாள்.

"ஏம்மா, இப்படிப் படுத்தறே? நான் என்ன குழந்தையா?"

"குழந்தை மாதிரிதானே நடந்துக்கறே" என்றவள் அழுத்தமாகத் துவட்டலானாள்.

நடக்கும் கூத்தை சுவாரஸ்யமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் எனது வாரிசுகளான அருணும், பிரியாவும். பாட்டி ஊரிலிருந்து வந்து விட்டால் இது போன்ற சுவாரஸ்யத்துக்குப் பஞ்சமே இருக்காது. எனக்குத்தான் அவஸ்தை, சங்கடம் எல்லாம்.

"போதும் பாட்டி. நீ துவட்டற துவட்டலுல முடியெல்லாம் கொட்டி மண்டைத் தோல் உறிஞ்சு மூளை வெளியே வந்துடப் போகுது'' என்றாள் பிரியா.

"அப்பாவுக்கு அதெல்லாம் இல்லைடி'' என்றான் அருண்.

எல்லோரும் 'கொல்' எனச் சிரித்தார்கள். அம்மாவும் சிரித்து விட்டாள். ஆனாலும் அடுத்த நொடியே "ஏய்! என்னங்கடா ஆளாளுக்கு என் குழந்தையைக் கிண்டல் பண்றீங்க. வாய் மேலேயே போடுவேன்" என்றாள்.

"நீ என்னை விடும்மா. அது போதும்'' என்றவன் மீண்டும் சாப்பாட்டு மேஜைக்கு வந்தேன்.

**பி**ரியா பன்னிரண்டாம் வகுப்பும், அருண் பத்தாம் வகுப்பும் படிக்கிறார்கள். பாட்டி வந்து விட்டால் அவர்களுக்கு உற்சாகம்தான். பழங்கதைகளை ஆவலுடன் கேட்பார்கள்.

"அப்பா" என்று குரல் கொடுத்தாள் பிரியா.



"அந்த ஆள் சின்ன வயசுல ரொம்ப சில்லறைத்தனமா இருப்பார்னு சொல்றீங்களே... இப்போ பரவாயில்லையா?..."

நோ

"ஊ ஹூம்...

'சேஞ்ச்'...."

– கே. ஆனந்தன்

"என்ன?" என்று கேட்டேன்.

"சினிமாவுக்குப் போய் ரொம்ப நாளாகுதுப்பா. நாளைக்கு எல்லோரும் போய்ட்டு வரலாமா? பாட்டியும் இருக்காங்க" என்றாள்.

"அடியே! பக்கத்து இலைக்கு பாயசம் மாதிரி என்னை ஏண்டி இழுக்கறே? உனக்கு ஆசைன்னா நேரடியா கேளு. இப்ப வர்றதெல்லாம் சினிமா; அதையெல்லாம் பார்க்கணுமா?" என்றாள் அம்மா.

"நேரடியாதான் பாட்டி கேட்கறேன்" என்றாள் பிரியா.

"அப்புறம் எக்ஸாம் வந்துடும்ப்பா... படிக்கிறதுக்கே நேரம் சரியா இருக்கும்" என்றான் அருண்.

"ஈவ்னிங் சொல்றேன். எனக்கு நேரமாகுது" என்றவன் சாப்பிடுவதில் கவனமானேன்.

அலுவலகத்தில் சற்று ஓய்வாக இருந்த போது சினிமாவுக்குப் போகலாம் என்று முடிவு செய்தேன். எந்தப் படத்துக்குப் போகலாம் என்று யோசித்தபோது புதிதாக வந்துள்ள 'ஹாரிபாட்டர்' பளிச்சென நினைவுக்கு வந்தது.

அதுதான் சரி. பிள்ளைகளும் குதூகலமாகப் பார்ப்பார்கள். நாமும் அம்மா பக்கத்தில் அமர்ந்து எந்த நெளியலுமின்றிப் பார்க்கலாம். அவள் சொல்வதைப் போல் இப்போது வருகிற படங்களை எல்லாம் எங்கே குடும்பத்துடன் அமர்ந்து பார்க்க முடிகிறது?

**வீ**ட்டுக்குத் திரும்பியதும், "நாளைக்கு மேட்னி ஷோ போகலாம்" என்றேன்.

"ஹைய்யா" என்று கத்தினான் அருண்.

"எந்தப் படத்துக்குப்பா?" என்று கேட்டாள் பிரியா.

"ஹாரிபாட்டர்" என்றேன்.

அவர்களிடம் துள்ளலை எதிர்பார்த்த எனக்கு ஏமாற்றம். இருவரும் அமைதியாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"என்ன சைலன்ட்டா இருக்கீங்க?" என்று கேட்டேன்.

"ஹாரிபாட்டர் வேண்டாம்பா. அதெல்லாம் சின்னப் பசங்க பார்க்கறது" என்றாள் பிரியா.

"நீங்க சின்னப் பசங்க இல்லியா?"

"போப்பா. எங்களுக்கு இஷ்டமில்லை" என்றான் அருண்.

"சரி, எதுக்குத்தான் போகலாம்?" என்று கேட்டேன்.

"அது இல்லைன்னா 'தம்பி' போகலாம்" என்றாள் பிரியா.

மெல்லச் சிரித்து "சரி" என்றேன்.

"ஹேய்ய்" என்று உற்சாகமாக கத்தியவர்களை ஏறிட்டுப் பார்த்தேன்.

நேற்றுதான் பிறந்து கையில் ஏந்திக் கொண்டதைப் போல் இருக்கிறது. ஆனால் அவர்கள் இது போன்ற பேச்சுக்களாலும் செய்கையாலும் தாங்கள் வளர்ந்து விட்டதை உணர்த்துகிறார்கள்.

நான் அம்மாவைப் பார்த்தேன். அவளது தலைத் துவட்டல் இப்போது அறியாமையாகத் தோன்றவில்லை. ○

# "ஐயாம் ஜேம்ஸ்பாண்ட்!"

தன் பெயரை வித்தியாசமாகச் சொல்வதில்தான் ஹீரோக்களுக்கே கிக்! அதிலும் ஓபனிங் சீனில் தெனாவட்டாக லுக் விட்டு, அடியாட்களைப் பறந்து பறந்து அடித்துத் துவைத்து விட்டு, சம்மர் லீவுக்கு கிராமத்துக்கு (கூடவே ட்ரஸ்ஸுக்கும் லீவு) வரும் ஹீரோயினை ஸ்பெஷலாகப் பார்த்துவிட்டு, புழுதி மண்ணைக் கண் சிவக்க நெற்றியில் இட்டுக்கொண்டே ஹீரோ தன் பெயரை 'நறநற' என சொல்லும்போதே தியேட்டரில் க்ளாப்ஸ் பறக்கும்...

ஹாலிவுட் ஹீரோக்களும் இதற்கு விதிவிலக்கல்ல! அதிலும் ஜேம்ஸ்பாண்ட் தன் ஒவ்வொரு படத்திலும் "மை நேம் ஈஸ் பாண்ட்... ஜேம்ஸ்பாண்ட்" என்று ஸ்டைலாகச் சொல்லும்போதெல்லாம் விசிறிகள் பாண்ட் வாசித்து வரவேற்பார்கள்.

ஒருமுறை ஜேம்ஸ்பாண்டின் விசிறியான ஆந்திர ரசிகர் ஹாலிவுட் சென்றார். "ஐயாம் பாண்ட்... ஜேம்ஸ்பாண்ட்" என்றார் ஸ்டைலாக, அடுத்து வர இருக்கும் ஆபத்தை அறியாமல்.

தெலுங்கு ரசிகர் உற்சாகமாகி, "மை நேம் ஈஸ் ரெட்டி..."

"...சிவா ரெட்டி

... சாம்ப சிவா ரெட்டி

... வெங்கட சாம்ப சிவா ரெட்டி...

... எலரகட்டா ஸ்ரீனிவாச வெங்கட சாம்ப சிவா ரெட்டி...

... ராஜசேகர எலரகட்டா ஸ்ரீனிவாச வெங்கட சாம்பசிவா ரெட்டி

... சீதாராமனேஞ்சனயாலு ராஜசேகர எரலகட்டா ஸ்ரீனிவாச வெங்கட சாம்பசிவா ரெட்டி...

.... விஜயவாடா சீதாராமனேஞ்சனயாலு ராஜசேகர எரலகட்டா ஸ்ரீனிவாச வெங்கட சாம்ப சிவா ரெட்டி..." என்று சொல்லிக்கொண்டே கை குலுக்க ஜேம்ஸ்பாண்ட் நுரை தள்ளி மயக்கம்..

லேட்டஸ்ட் தகவல்:

இப்போதெல்லாம் பாண்ட் தன் பெயரைச் சொல்வதில்லையாம்! வெறும் வாயசைப்போடு சரி!

- லதா சேகர்



# உலா வரும்



ஒவ்வோர் ஆண்டும் பெண்கள் உலகம், குறிப்பாக இளம்பெண்கள், உலகம், இரண்டுவிதமான திசைகளில் வளர்ந்து வருகிறது. ஒருபக்கம் பார்த்தால் புதிய புதிய துறைகளில் பெண்களின் அசுர வளர்ச்சி. மறுபக்கம் பார்த்தால் பெண்களுக்கு எதிரான அதீத கொடுமைகள். தற்கொலை செய்துகொள்பவர்களிலும் பெண்கள் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது என்பது வருத்தமான விஷயம்.

பன்னிரண்டாவது மாடியிலிருந்து ஒருபெண் குதித்துத் தற்கொலை செய்துகொள்ள முடிவெடுத்தாள். கடைசி விநாடிக்கு முன்பாகக் கடவுள் தோன்றினார். "உலகில் யாருக்குமே என்மேல் அக்கறையில்லை. எனக்கு மகிழ்ச்சியாகவே இல்லை. எனவே சாக விரும்புகிறேன்" என்றான் அந்தப் பெண்.

"உலகில் எல்லோரும் எப்போதும் மகிழ்ச்சியாக இருக்க முடியாது. எனவே நீ மட்டும்தான் இப்படி இருக்கிறாய் என்று எண்ணாதே! தற்கொலை செய்து கொள்ளாதே" என்றார் கடவுள். "முடியவே முடியாது" என்று மறுத்தாள் அந்தப் பெண்.

"சரி! நீ கீழே குதித்துத் தரைக்கு வந்து சேரும் வரை உனக்கு நேரம் தருகிறேன். உன் மனம் மாறினால் மீண்டும் வாழ வாய்ப்புத் தருகிறேன்" என்றார் கடவுள். கீழே குதித்தாள் அந்தப் பெண். என்ன ஆச்சரியம்! புவியீர்ப்பு விசை அவளை வேகமாக இழுக்கவில்லை. மெதுவாய், மிக மெதுவாய் கீழ்நோக்கி வந்து கொண்டிருந்தாள். பன்னிரண்டாவது மாடி ஜன்னலைக் கடந்தபோது அவளுக்கு அதிர்ச்சி. 'உலகின் மிக நேசமான தம்பதி' என்று விருது வாங்கிய ஜோடி, கண்மண் தெரியாமல் அடித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் கீழ்நோக்கி வந்தாள். பதினோராவது மாடி ஜன்னலைக் கடக்கும்போது உலகையே சிரிக்க வைக்கும் நகைச்சுவை நடிகர் தன் வீட்டுக்குள் வருத்தமே வடிவாய் உட்கார்ந்திருந்தார். பத்தாவது மாடி ஜன்னலைக் கடந்தாள். புகழ் பெற்ற தொழிலதிபர் தமது தொழில்

வானவில் வயசு-9




ஏற்பட்ட நஷ்டத்தால் 'காச்மூச்' என்று கத்திக் கொண்டிருந்தார். அடுத்த ஜன்னலிலோ பிரபல மருத்துவர் ஒருவர் வயிற்று வலியால் துடித்துக் கொண்டிருந்தார். இப்படியே ஒவ்வொரு ஜன்னலிலும் ஒவ்வொரு கதை. 'உலகில் எல்லோருமே எப்போதுமே மகிழ்ச்சியாக இருப்பதில்லை' என்று கடவுள் சொன்னது காதுகளில் ஒலித்தது. அவளது கால்கள் தரையை பத்திரமாகத் தொட்டன. எதிரே கடவுள் புன்சிரிப்போடு நின்று கொண்டிருந்தார். ''வாழ விரும்புகிறேன்'' என்றாள் இளம்பெண். "வாழ்க'' என்றார் கடவுள்.

உண்மையில், தற்கொலை செய்து கொள்ள விரும்பும் எல்லோர் முன்புமே கடைசி விநாடியில் கடவுள் தோன்றுகிறார். அவர்கள் மனத்தில் எழும் ஒரு சிறு தயக்கமாகத் தோன்றுகிறார். அதை நிராகரிக்கிறவர்கள்தான் இறக்கிறார்கள், புரிந்து கொள்பவர்கள் பிழைத்துக் கொள்கிறார்கள்.

இந்தக் கதையை இங்கே சொல்வதற்கு காரணம் இருக்கிறது. இளம் பெண்களின் தீவிர மனப்பான்மை குறித்தும் திடீரென்று எடுக்கும் முடிவுகள் குறித்தும் இன்று நிறைய ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.

குறிப்பாக பல இளம்பெண்கள், பெற்றோர்களிடமிருந்து மன அளவில் வெகுதூரம் விலகி நிற்கிற நிலை உலகம் முழுவதும் ஒரே மாதிரியாக ஏற்பட்டிருக்கிறது. இது ஏன் என்பது குறித்து மேரி பிபர் என்கிற உளவியல் நிபுணர் விரிவாக ஆராய்ச்சி செய்திருக்கிறார். அந்த ஆராய்ச்சி முடிவுகளை உள்ளடக்கி அவர் வெளியிட்டிருக்கிற 'ரிவைவிங் ஒபீலியா' என்கிற புத்தகம் பரபரப்பாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

புகழ்பெற்ற நாடகமாகிய 'ஹேம்லெட்'டில் வருகிற பெண் பாத்திரத்தின் பெயர் ஒபீலியா. ஹேம்லெட் மீது காதல் கொள்கிற அந்தப் பெண் தனது தந்தை மீதும் மிகுந்த பாசம் கொண்டவள். காதலன் மீதான நேசம், தந்தை மீதான பாசம் இரண்

மரபின் மைந்தன் முத்தையா



"துன்பம் வரும் வேளையில் சிரின்னு என் பையன்கிட்ட சொன்னது தப்பா போச்சு"

"ஏன்? என்னாச்சு?"

"கல்யாணம் பண்ணிக்கிறா யான்னு அவன் அம்மா கேட்டதும் சந்தோஷமா சிரிச்சு சம்மதிச்சுட்டானே"

- கேஎஸ். கிருஷ்ணவேணி

டுக்கும் இடையில் போராடி குழப்பத்துக்கும் மனச்சிதைவுக்கும் ஆளாகிற ஒபீலியா போலவே பல இளம்பெண்கள் இன்று குடும்பத்துக்கும் சமூகத்துக்கும் இடையில் அல்லாடுகிறார்கள் என்கிற அடிப்படையில் எழுதப்பட்டுள்ள புத்தகம் இது.

இதில் இளம்பெண்களை உற்சாக நிலாக்களாய் உலா வரச் செய்வதற்கு உருப்படியான யோசனைகள் பல இருக்கின்றன. தன் தோற்றத்தைப் பற்றி கவலைப்படுகிற இளம்பெண்கள், அதிக எண்ணிக்கையில் சிநேகிதிகள் இல்லாததால் அவதிப்படுகிற இளம்பெண்கள், தான் அழகாகத் தோற்றமளிக்காததாலேயே பெற்றோருக்குச் சுமையாகி விடுவோமோ என்று பயப்படுகிற இளம்பெண்கள் என்றொரு பட்டியலையே தருகிறார் மேரிபிபர்.

பெண்களை, குடும்பமும் சமூகமும் திறமைக்காகவும், நல்ல இயல்புக்காகவும் பாராட்டியே வளர்க்க வேண்டும்; அழகு, வசீகரம் இவற்றைக் காட்டிலும் தனித்தன்மை, அறிவாற்றல், செயல் திறமை ஆகியவற்றின் அடிப்படையிலேயே பெண்கள் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்கிறார் மேரிபிபர்.

பாசாங்கோ உள்நோக்கமோ இல்லாத நட்பைப் பகிர்ந்து கொள்ள இளைய தலைமுறை தயாராக இருக்கிறது. இதனை ஊக்குவிக்கும் விதமாக ஊடகங்களின் பார்வை மாற வேண்டும். ஆண் பெண் மத்தியில் பேசப்படும் இளக்கார வசனங்களும், இரட்டை அர்த்தப் பாடல்களும், கேலி, கிண்டல், குத்தாட்டங்களும் தங்கள் நட்பைக் கேலி செய்கிற விஷயங்கள் என்பதை இளைய தலைமுறை உணர்ந்து கொண்டால் எல்லா இரைச்சலும் அடங்கி விடும்.

தங்களைப் பற்றிய ஊடகச் சித்திரிப்புகள் கௌரவமானவையாக இருக்க வேண்டும் என்கிற விழிப்புணர்வு இளைஞர்களுக்கு ஏற்பட வேண்டும். சினிமாவில் காட்டப்படுகிற காதலோ, கல்லூரியோ தங்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கவில்லை என்று சொல்கிற கடமையும் உரிமையும் அவர்களுக்குத்தான் உண்டு.

ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும், அவர்களுக்குள் இருக்கும் மனித வளம்தான் மகத்தான புதையல். அந்தப் புதையலைக் கொண்டாடும் போதுதான் இளமையின் மகிமை முழுதாய் வெளிப்படும்.

பெண் என்பவள், வாலிபப் பருவத்துக்கு வண்ணம் சேர்க்கிறவள் மட்டுமல்ல, வாழ்க்கைக்கு அர்த்தம் சேர்க்கும் திறமைசாலி. தன்மானம் தீண்டப்படாதவரை பொறுமைசாலி.

(தொடரும்)

படம்: ஸ்ரீஹரி



# ரங் தே பஸந்தி



'ஒரு தேசம் விழித்துக் கொள்கிறது' என்ற அறிவிப்புடன் வெளிவந்திருக்கும் இந்தப் படம் ஒரு முக்கியமான சேவையைச் செய்திருக்கிறது.

ஜாலியான இளைஞர் குழு. அவர்களை வைத்து இந்திய விடுதலைப் போர் வீரர்கள் பற்றிய திரைப்படத்தை எடுக்கிறாள் ஒரு வெளிநாட்டுப் பெண். ஏதோ போனால் போகிறது என்றுதான் நடிக்கச் சம்மதிக்கிறார்கள் அவர்கள். ஆனால் போகப் போக தாங்கள் ஏற்கும் கதாபாத்திரங்களின் மேன்மையையும் அவர்கள் வாங்கிக் கொடுத்த சுதந்திரத்தின் பெருமையையும் உணர்கிறார்கள்.

விமானப் படையில் பைலட்டாகப் பணிபுரியும் அவர்களின் நண்பன் ஒருவன் (சோ ச்வீட்டாக வந்து போவது நம் மாதவன்தான்) விமான விபத்தில் இறந்து விடுகிறான். அதற்குக் காரணம் தரம் குறைந்த விமானத்தை, கமிஷன் பார்ப்பதற்காக, வாங்க ஒப்புக்கொண்ட பாதுகாப்பு அமைச்சர்தான் என்பது தெரியவருகிறது. இறந்தவனின் தாய், மனைவியோடு நண்பர்கள் பாராளுமன்றத்தின் எதிரே உண்ணாவிரதம் இருக்க, போலீஸ் அடித்துத் துரத்துகிறது. அமைச்சர் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. (ஜாலியன்வாலாபாக் படுகொலையின் போது "ஃபயர்" என்று ஜெனரல் டயர் கத்துவதைக் காட்டிவிட்டு, அடுத்த நொடியே பாதுகாப்பு அமைச்சர் அதே பின்னணியில் "ஃபயர்" என்று உத்தரவிட, மக்கள் சுருண்டு விழும்போது திரையரங்கில் சில நொடிகள் மௌனமும் பிறகு கைத்தட்டல்களும்). இறுதியில் உண்மையை மக்களுக்கு உணர்த்திவிட்டு, போலீஸ் கையால் மடிகிறார்கள்.

அமீர்கானுக்குச் சமமான (ஏன் சில கோணங்களில் அவரைவிட அழுத்தமான) பாத்திரம் சித்தார்த்துக்கு. அனுமதித்த அமீர்கானும், பாத்திரத்தை உணர்ந்து நடிக்கும் சித்தார்த்தும், தொடக்கத்தில் முஸ்லிம்களை ஒதுக்கி, பின்னர் மனம் மாறும் பாத்திரத்தில் அடுல் குல்கர்னியும் பாராட்டுக்குரியவர்கள். ஓம்புரி, அனுபம் கெர், வஹீதா ரஹ்மான் போன்ற அக்காலப் பிரபலங்கள் ஊறுகாயாகப் பயன்படுத்தப்பட்டுள்ளனர்.

குறிப்பிடத்தக்க பின்னணி இசை ஏ.ஆர். ரஹ்மான்.

இளைஞர்களுக்கு நாட்டுப்பற்றை ஊட்டுவதில் ரஹ்மானின் வந்தே மாதரம், பிறகு லகான் போன்ற முயற்சிகள் வெற்றி கண்டன. இப்போது ரங் தே பஸந்தி. வியாபார நோக்கு இருந்தாலும் கூடவே மேற்கூறிய நோக்கமும் இருப்பது வரவேற்கத்தக்கதுதான்.

- குல்லு



# ஒழிகாத ஷிப்பே!

“பொதுவாவே ‘நட்பு’ன்னா அது ஆண்களுக்குரிய விஷயம்னு தானே ஒரு எண்ணம் இருக்கு? ஆனால் என்னோட ‘பெண்’ சீரியல்ல இரண்டு பெண்களின் ஆத்மார்த்தமான நட்பைப் பற்றிச் சொல்லப் போகிறேன். அவர்களும் ஒத்த வயதுப் பெண்களல்ல! சீதா நடிக்கும் ரங்கநாயகி பாத்திரத்துக்கு ஐம்பத்து நாலு வயசு; அவரது தோழி மீராவாசுதேவனுக்கு இருபத்து நாலு வயசு! வாழத் துடிக்கும் நடுத்தரப் பெண்ணும் தற்கொலை முயற்சி செய்யும் இளம்பெண்ணும் சிநேகம் கொள்வதும், அதனால் ஏற்படும் இன்னபிற குழப்பங்களும்தான் கதை” என்கிறார் இயக்குனர் சி.ஜே. பாஸ்கர்.

சரவணபாண்டியன், சுபா, ரவி சுப்ரமணியம், வைரமுத்து என ஸ்டார் வேல்யூ உள்ள டீம் இணைந்திருப்பதே நல்லதொரு எதிர்பார்ப்பை உருவாக்கியிருக்கிறது.

“ஃப்ரெண்ட்ஷிப் டே’ அன்னிக்கு எல்லாரும் பாடற பாட்டா இது அமையணும். அப்படி ஒரு டைட்டில் சாங் எழுதிக் கொடுங்க” என்று சி.ஜே. பாஸ்கர் சொன்னதும், வைரமுத்து எழுதிக் கொடுத்த, ‘சாட்டை ஏதுமில்லை’ பாடல்தான் இப்போது மெகாசீரியல் நேயர்கள் அனைவரும் முணுமுணுத்துக் கொண்டிருப்பது.



- ஜெயா டிவியில் ஒளி பரப்பான ‘லைவ் சாய்ஸ்’ நின்றுவிட்டது. அதற்குப் பதிலாக வேறொரு டெலி ஃபோன் தொடர்பான நிகழ்ச்சி ஒளிபரப்பாக உள்ளது. அதை நடத்த இருப்பது அநேகமாக ஆண் காம்பியர் தானாம்.
- ‘ரேடியோ மிர்ச்சி’ சுசித்ரா விரைவில் விஜய் டிவிக்குள் நுழைய இருக்கிறார். இசை அல்லது கேம் ஷோ ஒன்றில் கலக்க இருக்கும் இவரால் இனி விஜய் டிவியை செம ஹாட்டாக அனுபவிக்கலாம்.
- சன் மியூஸிக் பெண் காம்பியர்கள் சிலர் தங்களுடைய டீ-ஷர்ட்டுகளில் ‘டூ மச்’ வாசகங்களைப் பயன்படுத்துகின்றனர். இதைக் கொஞ்சம் தவிர்க்கலாமே...
- சின்னத்திரை கலைஞர்களில் பிரேம்சாய், நீலிமா ராணி உள்ளிட்ட சிலர் மட்டுமே நேரடியாக மற்ற மொழி சீரியல்களில் நடிக்கின்றனர்.

- கலை

# குழந்தைகளின் உலகம்!

க.அம்சப்ரியா



- குழந்தைக்குச்
  சோறூட்டுகிறபோதுதான்
  கொத்துக் கொத்தாய் குழந்தைகள்
  மடியும் அக்காட்சியையும்
  பார்க்க நேர்கிறது.

- யார் கையேந்துவதைக் காட்டிலும்
  உறுத்துகிறது
  ஒரு குழந்தை
  தன் பிஞ்சுக்கரங்களை
  நீட்டுகையில்!

- இரக்கமற்றவர்களே
  வதைக்கிறார்கள் பூக்களையும்
  குழந்தைகளையும்!

- என்றைக்கு வாய்க்கும்?
  குழந்தைகளுக்கு
  குழந்தைகளின் உலகம்!

# எல்லாம் அவன் செயல்!

ஈச்வரன் மஹா மாயாவி! அவனன்றி அணுவும் அசையாது என்கிறார்கள். ஆனாலும் அவன் நம் மனஸிலே புகுந்து கொண்டுதான் நம்மை நினைக்கப் பண்ணுகிறான் என்பது கொஞ்சம்கூடப் புரியாத நிலையிலேயே நம்மை வைத்திருக் கிறான். நம் நினைப்பு கன்னாபின்னாவென்று இருப்பதைப் பார்க்கும்போது, 'இது நிச்சயமாக அவன் நினைப்பதாயிருக்க முடியாது; இப்படிப்பட்ட நினைப்புக்கள் அவனுக்கு ப்ரீதியாக இருக்காது' என்று தோன்றுகிறது. நல்ல நினைப்புக்களைத் தூண்டிவிடும்படி அவனிடமே ப்ரார்த்திக் கிறோம். காயத்ரீக்கே அதுதான் அர்த்தம். ஆனதால், எல்லாம் ஈசன் செயலே என்று சொன்னாலும், அவன் 'நம் செயல்' என்று நாம் ஏதோ செய்து பார்த்து, முட்டி, மோதிக் கொண்டு, அதனாலேயே அறிவு பெறு கிறோமா என்று பரீக்ஷிக்கிற விதத்தில்தான் நமக்குத் தனி மனஸைக் கொடுத்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எல்லாம் அவன் திட்டம், எல்லாம் அவன் செயல் என்றால் அப்புறம் நாம் நம்மைத் திருத்திக் கடைத்தேற்றிக் கொள்வதற்காக ஸாதனை என்று ஒன்று செய்ய வேண்டியதே இல்லையே!

**- ஜகத்குரு காஞ்சி
காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி
சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்**

## அருள்வாக்கு



# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத
# ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
# ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி-609 501.
## ✆ :04366 273900

### நூதன ஸ்ரீ நடராஜமூர்த்தி ப்ரதிஷ்டை, லட்சார்ச்சனை, ஸ்ரீ ருத்ராபிஷேகம், ஸம்வத்ஸராபிஷேகம் மற்றும் திருக்கல்யாண உற்சவம்

**பார்த்திப வருடம் பங்குனி மாதம் 2 ஆம் தேதி வியாழன் முதல் 5ஆம் தேதி ஞாயிறு முடிய (16.3.2006 - 19.3.2006)**

அன்புடையீர்,

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. இவற்றின் தொடர்ச்சியாக நிகழும் பார்த்திப வருடம் பங்குனி மாதம் 2ஆம் தேதி வியாழன் துவங்கி 5ஆம் தேதி ஞாயிறு முடிய (16.03.2006 - 19.03.2006) **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ உடனுறை ஸ்ரீ ஸற்குணேச்வர பெருமான் திருக்கோயிலில்** ஸ்ரீ நடராஜ மூர்த்தி ப்ரதிஷ்டா வைபவமும், ஸம்வத்ஸராபிஷேகப் பெருவிழாவும் நடைபெற இருக்கின்றன. அது சமயம் உலக நலனை முன்னிட்டு பல விசேஷ ஹோமங்கள், லக்ஷார்ச்சனை, ஸ்ரீ ருத்ராபிஷேகம், திருக்கல்யாண உற்சவம் மற்றும் ஸம்வத்ஸராபிஷேகம் முதலியன நடத்தப்படுகின்றன. இவை சிறப்பாக நடைபெற அனைவரும் தங்களால் இயன்ற ஹோம, பாராயண, ஜப, அர்ச்சனைகளுக்கான கட்டணங்களையோ அல்லது நன்கொடைகளையோ ஸபாவின் பெயருக்கு மணியார்டராகவோ, காசோலையாகவோ அல்லது வரைவுக் காசோலையாகவோ அனுப்பக் கோருகிறோம். அல்லது கீழ்கண்ட முகவரியில் யாரிடமாவது செலுத்தலாம்.

ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாமத்தினாலும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தினாலும் நடைபெறுகிற லட்சார்ச்சனைகளுக்கு விருப்பப்படுகிறவர்கள், இரண்டுக்குமாக சேர்த்து ரூ.200/- செலுத்தலாம்.

*என்றும் இறைபணியில்*

*Dr. V. கிருஷ்ணமூர்த்தி*
*பரம்பரை அறங்காவலர்*

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா (Regd).**
32/18, டபீர் புதுத்தெரு, கும்பகோணம் - 612 001.
போன்: 0435-2423297 மற்றும் **கிராமவாசிகள்**

*பொன். சிவசங்கரன் M.A. நிர்வாக அதிகாரி*

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீமஹா கணபதி ஹோமம் | ரூ. 100/- |
| 2. | ஸ்ரீ நவக்ரஹ ஹோமம் | ரூ. 100/- |
| 3. | சிறப்பு சூர்ணாபிஷேகம் (மஞ்சள் பொடி) | ரூ. 100/- |
| 4. | சிறப்பு குஸும நாளிகேராபிஷேகம் (இளநீருடன் குங்குமப்பூ கலந்து) | ரூ. 100/- |
| 5. | சிறப்பு அபிஷேகம் | ரூ. 200/- |
| 6. | ஸ்வாமி, அம்பாள் லட்சார்ச்சனை | ரூ. 200/- |
| 7. | வஸ்த்ரதானம் (ஒரு ரித்விக்கிற்கு)-20 | ரூ. 400/- |
| 8. | அன்னதானம் (ஒருவேளை) | ரூ. 500/- |
| 9. | புஷ்ப கைங்கர்யம் (ஒருவேளை) | ரூ. 500/- |
| 10. | தம்பதி பூஜை (ஒரு தம்பதிக்கு) | ரூ.1000/- |
| 11. | ஸ்ரீருத்ர ஜப, ஹோம ஸங்கல்பம் | ரூ.1000/- |
| 12. | ஸ்வாமி, அம்பாளுக்கு வேஷ்டி, புடவை (9x5-9 கஜம்) | ரூ.1000/- |
| 13. | ஸந்தர்ப்பனை (ஒருநாள்) | ரூ.2500/- |
| 14. | திருக்கல்யாண உற்சவம் | ரூ.2500/- |

**மார்ச் 16, 17, 18 ஆகிய மூன்று நாட்களிலும் மாலை 6.00 மணிக்கு மேல் சிறப்பு சொற்பொழிவுகளும், இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.**

குறிப்பு: நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான கட்டணத்தை **"ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா"**விற்கு மணியார்டர் அல்லது வரைவுக் காசோலை (D.D) அல்லது பொருளாகவோ அனுப்பலாம். அல்லது கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றிற்கு அனுப்பவும்.

**G. குஞ்சிதபாதம், FCA.,**
டபீர் மேலத்தெரு, கும்பகோணம்-612 001
போன்: 0435 2420047

**V.L. நாராயண சாஸ்திரிகள்,**
25/1 சுப்பாரெட்டித் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
போன்: 044-24897125

**G. கண்ணன்,** D/127-A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர், சென்னை -78.
போன்: 044-24836495

**R. வைத்தியநாதன்,** மேலாளர்,
இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பிளாட் நெ. 4, கதவு எண் 12, 29வது தெரு,
தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை - 600 061. போன்: 044 - 22333361

**குடந்தை - பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அருள்மிகு ஸற்குணேஸ்வரர் ஆலயம்.**

"யோவ்... என்னய்யா... உன் கூட பெரிய கண்வலியா போச்சே... பல் வலியா போச்சே''னு யாராவது சொல்லிக் கேட்டிருக்கீங்களா? 'தலை வலியா போச்சே!'னுதானே சொல்லு வாங்க! கொஞ்சம் விஷயம் தெரிஞ்ச வங்க, இனிமே "என்னய்யா... உன் கூட ஃப்ராண்டல் சைனஸ் தலைவலியா போச்சே''னு அலுத்துக்கலாம்! அந்த அளவுக்கு இந்தத் தலைவலி பேஜார் ரகம்தான்!

'இந்தத் தலைவலி ஏன் வருகிறது? இதற்கு என்ன நவீன சிகிச்சை?' என்று விளக்குகிறார் திருச்சி, தில்லை நகரில் உள்ள, ராயல் பேர்ல் மருத்துவமனை யின் காது, மூக்கு, தொண்டை இயல் நிபுணர் டாக்டர் டி.என்.ஜானகிராம்.

"ஃப்ராண்டல் சைனஸ் பிரச்னை இருப்பவர்களுக்கு காலையில் எழுந்திருக் கும் போதே தலைவலிக்கும். இரண்டு புரு வங்களுக்கு மத்தியில் ஆரம்பிக்கும் வலி, கண்களுக்குப் பரவி, அப்படியே நெற்றி யின் நடுவில் 'விண் விண்'என்று தெறிக் கும்.

நேரமாக நேரமாக மண்டையைப் பிளந்து விடும். தலையைக் குனிந்தால், வலி அதி கரிக்கும்.

'ஃப்ராண்டல் சைனஸ்' என்பது புரு வத்தின் மேற்புறம், நெற்றியின் நடுவே இடது - வலது என இரண்டு புறமும் உள்ள காற்றுப் பைகள்.



• டாக்டர் டி.என்.ஜானகிராம்.

காற்று மட்டுமே இருக்க வேண்டிய இந்தப் பைகளில், சளியோ, நீர்க்கட்டிகளோ, சீழோ, புற்றுக்கட்டிகளோ உருவாகும்போது, தலைவலி ஏற்படுகிறது. சைனஸ் பைகளில் உள்ள பிரச்னையைப் பொறுத்து, தலைவலியின் தீவிரமும் அதிகமாகும்.

'ஃப்ராண்டல் சைனஸ்' தலைவலி போக என்ன செய்யணும்?

* வலி நிவாரணி, ஆன்டிபயாடிக்ஸ் போன்றவை தலைவலியை ஓரளவு கட்டுப்படுத்தும்.
* மூக்கடைப்பு, தலைவலி ஏற்படும் போதெல்லாம், கொதிக்க வைத்து, ஆற வைத்த சுத்தமான ஒரு தம்ளர் நீரில், இரண்டு டீஸ்பூன் கல் உப்பு, ஒரு டேபிள் ஸ்பூன் சமையல் சோடா கலந்து கொள் ளவும். இதை, இங்க் ஃபில்லர் மூலம் மூக்கில் ஏழெட்டு சொட்டு போட்டுக் கொண்டு, ஐந்து நிமிடம் ரிலாக்ஸ் செய்து கொள்ளவும். இதுபோல ஒரு நாளில், மூன்று தடவை செய்தாலே போதும். நல்ல நிவாரணம் தெரியும்.

# விரட்டுங்க

இதற்கெல்லாம் மசியாத தலைவலி இருந்தால், FESS (functional endoscopic sinus surgery) எனப்படும் சைனஸ் அறுவைச்





சிகிச்சை ஒன்றே தீர்வாக இருக்கும்.

இப்போது இந்த அறுவைச் சிகிச்சை முறையிலேயே, நிறைய நவீன முறைகள் வந்துவிட்டன. ஜெர்மன் நாட்டில் மிகப் பிரபலமாக உள்ள 'ஃப்ராண்டல் ரீஸஸ் சர்ஜரி'யை அதே டிஜிட்டல் டெக்னாலஜி துல்லியத்துடன் இந்தியாவிலேயே முதன்முறையாக நாங்கள்தான் செய்கிறோம்.

பொதுவாக, சைனஸ் ஆபரேஷன்

# தலைவலியை!





களில் என்டோஸ்கோபியைப் பயன்படுத்தும்போது அது மூக்குக்குள்ளே நேராகத்தான் செல்லும்! ஆனால் 'ஃப்ராண்டல் சைனஸோ', புருவங்களுக்கு மத்தியில், நெற்றிக்கு நடுவே உள்ளது. அதை மேல் நோக்கிப் பார்க்கும் வகையில், தொண்ணூறு டிகிரி என்டோஸ்கோப், மற்றும் எழுபது டிகிரி என்டோஸ்கோப்களை நாங்கள் பிரத்யேகமாகப் பயன்படுத்துவதால், துல்லியமாகச் செயல்பட முடிகிறது!

காற்றுப்பையை மூடியிருப்பது, நீரோ, கட்டியோ, சளியோ, சீழோ... அது எதுவானாலும், சுத்தமாக உறிந்து எடுத்துவிடக்கூடிய 'டிப்ரைடர்' கருவியைப் பயன்படுத்துவதும் இன்னொரு சிறப்பு.

'ஃப்ராண்டல் சைனஸ்' காற்றுப் பைகளுக்கும், மூளைக்கும் இடையே இருப்பது வெறும் இரண்டு மில்லி மீட்டர் இடைவெளியே என்பதால், டிப்ரைடர் டெக்னாலஜியைப் பயன்படுத்தும்போது மிகமிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். கொஞ்சம் கவனக்குறைவாக இருந்தாலும், மூளை சேதாரமாகிவிடும். இது ஒரு ரிஸ்க்கான ஆபரேஷன்தான் என்றாலும் நிவாரணம் நூறு சதவிகிதம் என்பதால், மேலைநாடுகளில் மிகவும் பிரபலமாக உள்ளது.

காற்றுப் பைகளில் ரத்துப் போக்குள்ள கட்டிகள் இருந்தால், லேஸர் சிகிச்சை மிகச் சிறந்த நிவாரணம் தரும். முன்பெல்லாம் சைனஸ் ஆபரேஷன் என்றால் நோயாளிகள் நாற்பத்து எட்டு மணி நேரம் வாயால் மூச்சுவிட்டு கஷ்டப்பட வேண்டியிருக்கும். இப்போது, 'மெரோஸில் ஜெல்' என்றொரு ஸ்பான்ச் பேக் வசதி வந்துவிட்டதால், மூக்காலேயே மூச்சுவிடலாம்'' என்கிறார் டாக்டர் டி.என். ஜானகிராம்.

**- மினி**

இடது சாரிகள் எதிர்த்தபோது அது ஏதோ வழக்கமான சித்தாந்த வேறு பாட்டினால் விளைந்தது என்று எண்ணியவர்கள் கூட, இதைத் தொடர்ந்து இந்தியாவின் வெளிநாட்டுத் தூதர்களாக விளங்கிய எட்டுப்பேர் சேர்ந்து இந்த 'ரகசியம்' உடைக்கப்பட வேண்டும் என்னும்போது யோசிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

என்ன ரகசியம்? அமெரிக்க அதிபர் புஷ் இந்தியாவுக்கு வருகை தரும்போது இருநாடுகளுக்குமிடையே கையெழுத்திட இருக்கும் ஓர் ஒப்பந்தம் தொடர்பான உண்மைகள்.

எந்தவொரு நாடும் அணுசக்தி ஆராய்ச்சியை ஆக்கபூர்வமாகவும் பயன்படுத்தலாம். அழிவுவேலைகளுக்கும் பயன்படுத்தலாம். இந்த இரண்டு பிரிவுகளையும் தெளிவாகப் பிரித்து அமெரிக்காவிடம் அந்த விவரங்களை அளித்துவிட வேண்டும் என்ற நிலைப்பாடுக்கு இந்தியா ஒப்புக் கொண்டிருக்கிறது. இதற்குத்தான் எதிர்ப்பு. இது தேசத்தின் நலனுக்கு முரணானது என்ற வாதம் வலுப்பெற்று வருகிறது.

எதற்காக நம்நாட்டின் முக்கிய விவரங்களை பிற நாடுகளிடம் அம்பலப்படுத்த வேண்டும்? அப்போதுதான் அணுசக்தி தொழில்நுட்பம் வெளிநாடுகளிலிருந்து இங்கு வந்து சேர விதிக்கப்பட்டிருக்கும் தடை நீங்கும். நம் அணு ஆராய்ச்சிகளுக்குத் தேவையான சில அடிப்படைப் பொருள்களை இறக்குமதி செய்ய முடியும்.

ஐ.நாவிடம் விவரங்களை அளித்தாலும் போதுமானதுதான். ஆனால் அதற்கு முன் அமெரிக்காவின் ஒப்புதலும் பெற வேண்டியது நடைமுறைக் கட்டாயம்!

பிரதமர் மன்மோகன் சிங் நம் நாட்டில் உள்ள ராணுவ மற்றும் ராணுவம் அல்லாத அணு ஆராய்ச்சிகளைப் பிரித்துக்காட்ட ஒப்புக்கொண்டு விட்டார்.

வெளிநாடுகளிலிருந்து பெறப்படும் அணு ஆராய்ச்சி தொடர்பான உதவிகளை எந்தவொரு நாடும் அழிவுக் காரணங்களுக்குப் பயன்படுத்தக் கூடாது என்கிற நியாயமான பின்னணி இதற்கு உண்டு. என்றாலும் ஏற்கெனவே அணு ஆயுத நாடுகளாக அறிவிக்கப்பட்ட நாடுகளின் சட்டாம்பிள்ளைத்தனம் இதில் அதிகமாகவே உள்ளது.

இந்திய அணு ஆராய்ச்சிக்கும் அணு ஆயுதங்களுக்கும் ப்ளூட்டோனியம் தேவைப்படுகிறது. இது பாபா அணு ஆராய்ச்சி மையத்தில் உள்ள சைரஸ், துருவா ஆகிய இரண்டு ஆராய்ச்சிக் கலங்களில்தான் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்த உற்பத்தி போதாது; மேலும் அதிகம் தரம் கொண்ட ப்ளூட்டோனியம் நமக்குத் தேவைப்படுகிறது.

இந்தியாவின் மின்சக்தி திட்டங்களுக்கு யுரேனியமும் கனநீர் ரியாக்டர்களும் தேவைப்படுகின்றன. ரஷ்யா இப்போது அளித்துவரும் யுரேனியம் இந்த ஆண்டு இறுதி வரைதான் நீடிக்கும். அதோடு ஒப்பந்த காலம் முடிவடைகிறது. தொடர்ந்து யுரேனியம் இறக்குமதி செய்ய வேண்டுமென்றால் ஐ.நாவின் ஒப்புதல் தேவை.

அணுசக்தி ஆராய்ச்சிகளை ராணுவம், சிவிலியன் என்று பிரித்துக்காட்ட வேண்டிய கட்டாயம் ஏற்படும்போது எந்த உத்தியைக் கடைப்பிடிப்பது நல்லது?

சிவிலியன் பிரிவில் பெரும் பங்கைக் காட்டுவது ஒரு விதத்தில் நல்லது.



• மன்மோகன் சிங்



• ஜார்ஜ் புஷ்

ஏனென்றால் இந்தப் பிரிவுக்குத்தான் வெளிநாட்டிலிருந்து நிதி மற்றும் எரிபொருள் ஆகியவை தடையின்றிக் கிடைக்கும்.

ஆனால் ராணுவ பயன்பாட்டுக்கு உள்ள எதையும் சிவிலியன் பிரிவுக்கு மாற்றுவதில் பிறநாடுகளுக்குத் தடை இருக்காது. சிவிலியனிலிருந்து ராணுவத்துக்கு ஆராய்ச்சிகள் மாற்றப்பட்டால்

ஒரு சங்கடம் உண்டு. "எங்கள் நாட்டின் உதவியைக் கொண்டு சிவிலியன் பிரிவுக் காகப் பெறப்பட்ட உதவிகள் ராணுவப் பிரிவுக்குப் பயன்படுத்தப்படக் கூடாது' என்று பிற நாடுகள் எதிர்ப்பு தெரிவிக்க லாம். அந்த விதத்தில் பார்த்தால் ராணு வம் தொடர்பான அணு ஆராய்ச்சிகளை அதிகமாகக் காட்டுவது நல்லது.

'தேசியப் பாதுகாப்பு தொடர்பான எந்த விஷயமும் சிவிலியன் பிரிவில் சேர்க்கப்படாது' என்று உத்தரவாதம் அளித்துள்ளார் இந்திய அணுசக்தி கமிஷனின் தலைவர். அதாவது நாட்டின் ராணுவ ரகசியங்கள் அம்பலமாகாது என்று கூறுகிறார்.

இந்திய - அமெரிக்க ஒப்பந்தத்தை அமெரிக்க பாராளுமன்றம் ஏற்றுக் கொண்டு விட்டால், அணு சக்தி பொருள்கள் மற்றும் தொழில்நுட்ப இறக்குமதி குறித்து பிற அணுசக்தி நாடுகளுடன் நம்மால் பேச்சுவார்த்தை நடத்த முடியும் என்கிற அளவில் இந்த ஒப்பந்தம் தவிர்க்க முடியாததுதான். ஆனால் அது நம்பகத் தன்மை கொண்ட தாகவும் வெளிப்படையானதாகவும் இருக்க வேண்டும்.

**வி**ஞ்ஞானிகளிடம் சில அச்சங்கள் உள்ளன. அணுசக்தி தொழில்நுட்பத்தில் இப்போது இந்தியாவுக்கு சில தொழில் நுட்ப சுதந்திரங்கள் உண்டு. அவை பறிபோய்விடக் கூடாது. அதேபோல் இதற்காக ஆகும் செலவுகள் நம் நாட்டு கட்டுப்பாட்டுக்குள் இருக்க வேண்டுமே தவிர பிற நாடுகள் அதை நிர்ணயிக்கக் கூடாது. தவிர இவை தொடர்பான தகவல்களைப் பெற நமக்கு இருக்கும் உரிமைகள் பாதிக்கப்படக் கூடாது.

# ரகசியம் அவசியமா?

அணுசக்தி ஆராய்ச்சிகளில் அமெரிக்காவின் உதவி இந்தியாவுக்கு உடனடியாகத் தேவை என்றுதான் டெல்லியில் உள்ள அரசியல்வாதிகள் எண்ணுகிறார்கள். ஆனால் அணுசக்தி விஞ்ஞானிகளின் கருத்து வேறு மாதிரி இருக்கிறது. இந்த ஒப்பந்தத்தினால் அதிகம் பயனடையப்போவது அமெரிக்காதான் என்கிறார்கள் அவர்கள். 1979-க்கு பிறகு அமெரிக்கா எந்த புதிய ரியாக்டரையும் உருவாக்க வில்லை. புதிய தொழில்நுட்பத்தைச் செயல்படுத்த அங்கு இந்திய விஞ்ஞானிகள் தேவைப்படுவார்கள். அதேபோல் கனடாவுக்கும் இந்திய தொழில்நுட்பம் நிச்சயம் தேவைப்படும்.

ஒப்பந்தத்தைவிட, அதை ரகசியமாக அரசு வைத்துக் கொள்வதுதான் சந்தேகங்களுக்குக் காரணம். "வெளி நாட்டினர் தெரிந்துகொள்ளக் கூடிய நம் நாட்டு விவரங்களை இந்திய மக்கள் தெரிந்து கொள்ளக் கூடாதா?" என்ற வாதம் வலுவானதுதான். அதைத் தீர்த்து வைக்க வேண்டியது மத்திய அரசின் கடமை.

**- ஜி.எஸ்.எஸ்.**

பார்த்திபனின் புதுப்படமான 'பச்சக்குதிர'யின் நாயகி நமீதாவிடம், "உங்க ஊரில் குதிரை என்ன நிறத்தில் இருக்கும்?" என்றோம். உடனே ஓடி விட்டார் ப்ளாஷ்பேக்குக்கு

"எனக்கு நாய்க்குட்டின்னா ரொம்ப இஷ்டம் அதோட வாலை சீண்டிக்கிட்டே இருப்

காலாண்டு அரையாண்டு லீவ்ல என் கால் சும்மாவே நிற்காது. எனக்கு அப்போதிரு ஊர் சுற்றப் பிடிக்கும். சினிமாவுக்கு வந்ததுக்கு இதுவும் ஒரு காரணம். நேத்து பொள்ளாச்சியி அடுத்த நாள் போலந்திலயும் இருக்கணும்னா அதுக்கு சினிமாதானே பெஸ்ட்?

நான் ஒரு இயற்கை பிரியை. தினமும் பூ வைச்சுட்டுதான் ஸ்கூலுக்குப் போவேன். உ வாடினா உடனே மாத்தறதுக்கு ஸ்பேர் வைச்சிருப்பேன். புது பூக்களைப் பார்த்தா டிசை டிசைனா பேர் வைப்பேன். அப்படி வைச்சதுல ஒரு பேர்... நமீதா!

நான் டீவி பைத்தியமும் கூட. ஸ்கூல் படிக்கிற காலத்துல விழுந்து விழுந்து... படிக்கலைங் சம்மணம் போட்டு ராமாயணம், மஹாபாரதம் பார்த்திட்டிருப்பேன்... சீதாவா நடிச்ச தீபிக என் கனவு நாயகி!

சாப்பாட்டு ராணின்னுதான் என்னை ப்ரெண்ட்ஸ் கூப்பிடுவாங்க. என்ன புது டி சமைச்சாலும் நான்தான் சர்டிஃபிகேட் தருவேன். உலக ருசியா இருந்தாலும் காரம் அதிக சரியா வேகலைன்னு என் தீர்ப்பை மாத்திச் சொல்வேன்.

கண்ணாமூச்சி, திருடன் போலீஸ் விளையாட்டெல்லாம் கூரத்துலயும் உண்டு. பேஸ்கெட்ட





# ஏற்கெனவே ...டியது தான்!”

• 'பச்சக்குதிர' படத்தில்...

விளையாட்டுல நான் வேணாம்னு சொன்னாலும் என் உயரத்துக்காகச் சேர்த்துப்பாங்க. கிரிக்கெட் கூட விளையாடுவோம். ஆனா என் ஃப்ரெண்ட்ஸ் யாருக்கும் ஒழுங்கா பேட் பிடிக்கவே தெரியாது. பௌலிங் சுத்தம்...!

ம்... என்னடா இன்னும் பச்சைக் குதிரையைப் பற்றிப் பேசலையேன்னுதானே நினைக்கறீங்க... எங்க வீட்டுலயும் மரக்குதிரை பொம்மை உண்டு. அதுல ஏறி நான் அமெரிக்கா, அண்டார்டிக்கா எல்லாம் போயிருக்கேன் தெரியுமா? நின்ன இடத்துலயே அவ்வளவு ஸ்பீடா போகும். தமிழ்நாட்டுல பச்சைக் குதிரை விளையாட்டுன்னா எப்படின்னு பார்த்திபன் விளக்கிச் சொன்னார். ம்... ஹை ஜம்ப் மாதிரிதான் ஜாலியா இருக்கு” என்றவரை நிகழ்காலத்துக்கு அழைத்து வருவதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

- எழில்

படங்கள் உதவி : ஜான்சன்

"காதுகளை இவ்வளவு பத்திரமாகக் காப்பாற்றுகிறீர்களே, என்னைக் கவனிப்பார் யாருமில்லையா?" என்று அசட்டு வயிறு கேட்கிறது. இதற்குப் பதில், "ஏன் இல்லை? முன்ஷிதான் இருக்கிறாரே!" என்று சொல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் முன்ஷியைவிட நமது அருமை ரேடியோ நிலையத்தார்கள் அரிசி நெருக்கடியைத் தீர்ப்பதில் முனைந்து நிற்கிறார்கள். அரிசியில்லாமல் தயாராகும் எத்தனையோ விதவிதமான பண்டங்களை நமக்கு விவரமாகச் சொல்லித் தருகிறார்கள்!

புளியங்கொட்டை என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? கடையில் "ஒரு வீசை நல்ல புளி கொடு" என்று கேட்கும்போது மளிகைக் கடைக்காரர் காகிதத்தில் கட்டித் தருகிறாரே அதுதான்! ஒரு வீசைப் புளி வாங்கினால் அதில் முக்கால் வீசை புளியங்கொட்டை தேறும் போது விஷயம் தெரியாதவர்கள் நாம் ஏமாந்து விட்டோமென்று சொல்வார்கள். ஆனால் உண்மையில் ஏமாந்தவர் கடைக்காரர்தான். புளியங்கொட்டையில் எல்லாவித வைட்டமின்களும் இரும்பு, சுண்ணாம்பு, திராவகச் சத்துக்கள் நிறைந்திருப்பதாகச் சேலம்வாசிகள் கண்டு பிடித்திருக்கிறார்களாம். இப்படி மிகச் சிறந்த வஸ்துவை மலிவான விலைக்கு நமக்குக் கொடுக்கிறாரே, அப்போது ஏமாந்தவர் கடைக்காரரா? நாமா?

உணவுப் பஞ்ச காலத்தில் இந்தப் புளியங்கொட்டையை மிகச்

# புளியங்கொட்டை அல்வா!

சிறந்த முறையில் உபயோகிக்கலாம். அந்த முறை இதுதான்:-

அரைப்படி புளியங் கொட்டையை ஒரேயளவாகப் பொறுக்கியெடுத்துக் கொள்ளவும். தண்ணீரில் இரண்டு நாள் ஊறப்போடவும். பிறகு மூன்றாம் நாள் காலை தண்ணீரிலிருந்து அவற்றை எடுத்து வெய்யிலில் ஒரு நாள் முழுவதும் நன்றாகக் காயப்போடவும். (இந்த மூன்று நாளிலும் எதைச் சாப்பிட்டுக் கொண்டு காலத்தைக் கழிப்பதென்று கேட்காதீர்கள்!)




பிறகு ஒரு அகலமான வாணலியை (எரிகிற) அடுப்பில் போட்டு அதில் ஆழாக்கு நெய்யை விடவும். உலர்த்திய புளியங்கொட்டைகளை இந்த வாணலியில் போட்டு நெய்யில் பொன் வறுவலாக வறுக்கவும். இப்படி வறுக்கப்பட்ட கொட்டைகளைக் காப்பிப் பொடி அரைக்கும் எந்திரத்தில் அரைக்கவும். அரைத்த பொடியைத் தனியாக எடுத்து வைத்துக் கொள்ளவும்.

மறுபடியும் வாணலியில் இன்னும் இரண்டு ஆழாக்கு நெய்யை விட்டு அதில் இந்த புளியங் கொட்டைப் பொடியை மெதுவாகப் போடவும். நாலு மூடி தேங்காயைத் துருவி அதன் தலையில் போடவும். ஏலக்காய், ஜாதிக்காய், லவங்கம் முதலியவற்றையும் சேர்த்தால் ஏற்படும் வாசனை, உங்களை ஒரு கலக்குக் கலக்கிவிடும். இவற்றைப் போட்டுக் கிளறிக் கொண்டேயிருக்கும்போது இரண்டு வீசை



வெல்லத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுக்கொண்டே வரவும். அல்வா நிதானத்திற்கு வந்தவுடன் கீழே இறக்கினால், பண்டம் இறுகிக் கொண்டே வரும். அப்போது துண்டம் போட்டு விட்டு மேலே அரை வீசை சர்க்கரையைத் தூவவும். சூடாகப் பரிமாறவும்.

இட்லிக்குச் சட்டனி போல இந்தப் புளியங்கொட்டை அல்வாவுக்குத் தொட்டுக்கொள்ள ஆளுக்கு நாலு ஸ்பூன் சர்க்கரை வைத்தால் இன்னும் கொஞ்சம் ருசியாக இருக்கும்.

புளியங்கொட்டை அல்வா பண்ணிச் சாப்பிடும் செலவுக்கு ஒரு கல்யாணத்திற்கு அரிசி வாங்கிடலாமென்று தோன்றுகிறதல்லவா? அப்படிச் செலவைப் பார்த்தால் அரிசிப் பஞ்சம் எப்படிக் குறையும்?

**- கல்கி, செப்டெம்பர் 3, 1950 இதழிலிருந்து**

“மக்களுக்கு உரிமை இருக்கிறது. சட்டங்களை மாற்றவும், ஏன் அரசாங்கங்களை மாற்றவும் கூட உரிமை உண்டு. இந்த உரிமையைப் பயன்படுத்த அமைதியான ஜனநாயக முறையை நாட வேண்டும். வன்முறை வழியைத் தேர்ந்தெடுப்போர் ஜனநாயகத்தில் நம்பிக்கையற்றவர்களாவர்”. பண்டித ஜவஹர்லால் நேருஜி சொன்ன அந்த ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டுதான் தமிழக மக்கள் முன்வந்து நிற்கிறேன், துப்பாக்கிக் குண்டைக் காட்டிலும் வல்லமை படைத்த வாக்குச் சீட்டைப் பயன்படுத்தி நல்லாட்சி மலரச் செய்யப் போகிறேன்.

எந்தக் கட்சியுமே மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை. மக்கள் பணத்தைக் கொள்ளையடிக்கிறாங்க; மக்கள் வெறுப்பை ரொம்பவே சம்பாதிச்சிருக்காங்க. இந்தக் கசப்பான உண்மையை என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. நேர்மையாக மக்களுக்கு உழைக்கணும், அதுக்காக ஒரு இயக்கம் ஆரம்பிக்கணும்ங்கிற உந்துதல் காரணமாகத்தான் நானே அரசியலில் இறங்கிட்டேன்.

‘விஜயகாந்த் எந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டார். மக்களுக்காகப் போராடி எத்தனை முறை சிறை சென்றார்?’ சிலர் என்னைப் பார்த்துக் கேட்கிறார்கள். உங்கள் கேள்வி நியாயமானதுதான். தயாநிதிமாறனும், அன்புமணியும் எத்தனை போராட்டங்களில் கலந்து கொண்டார்கள்? மக்களுக்காகப் போராடி எத்தனை முறை சிறை சென்றார்கள் என்பதைச் சொல்ல முடியுமா? நாட்டுக்காக எந்தத் தியாகமும் சேவையும் செய்யாத உங்கள் வாரிசுகளுக்கு உயர் பதவிகளை வாங்கிக் கொடுத்திருக்கிறீர்களே இது நியாயமா என்று உங்கள் தலைவர்களைப் பார்த்துக் கேட்க முடியுமா?

நான் பள்ளிச் சிறுவனாக



விஜயகாந்த் பேசுகிறேன்! 20



# கனவு நனவாகட்டும்!

இருந்த காலம். சுதந்திர தினவிழா அன்று சிறுவர்கள் எல்லாம் மிட்டாய் சுவைத்துக் கொண்டிருக்கும்போது நான் மட்டும் வித்தியாசமாகச் சிந்தித்துக் கொண்டிருப்பேன். வாயில் இனித்துக் கொண்டிருக்கும் மிட்டாய் இதயத்தில் இனிக்கும் அளவுக்கு இந்தியா முன்னேற வேண்டும் என்று நினைப்பேன்.

'ஜன கன மண' என்று தேசிய கீதம் பாடும்போது என் நாடி நரம்பெல்லாம் முறுக்கேறிப் போய் நிற்பேன். சுருக்கமாகச் சொன்னால், அந்த வயதிலேயே என் தாத்தாவை நேசித்ததைவிட காந்தி தாத்தாவை நேசித்தேன். என் மாமாவை நேசித்ததை விட நேரு மாமாவை அதிகம் நேசித்தேன்.

நான் வளர வளர இந்தியாவும் வளரும் என்று நினைத்தேன். ஆனால் நான் கற்பனை செய்த அளவுக்கு இந்தியா வளரவில்லை என்ற வருத்தம், எல்லாத் துறைகளிலும் மற்ற நாடுகளோடு போட்டிபோட முடியவில்லையே என்ற வருத்தம், சுதந்திரம் வாங்கிய குறுகிய காலத்தில் சிறிய நாடான ஜப்பான் வளர்ந்த அளவுக்கு பெரிய நாடான இந்தியா வளரவில்லையே என்ற வருத்தம் என்னை வாட்டிக்கொண்டே இருந்தது.

இதற்கெல்லாம் என்ன காரணம் என்று யோசித்தபோது எனக்குக் கிடைத்த விடை, நாட்டை நேசிப்பதைவிட தங்கள் குடும்பத்தை நேசிக்கின்ற அரசியல்வாதிகள்; நாடு வளம் பெறுவதைவிட தங்கள் வீடு வளம்பெற வேண்டும் என்று நினைக்கிற அரசியல்வாதிகள், நாட்டுப்பற்று இல்லாத அரசியல்வாதிகள், அன்னிய நாடுகளுக்கு கைக்கூலிகளாக இருக்கும் அரசியல்வாதிகள், பதவிக்காக எதையும் இழக்கத் துணிந்த அரசியல்வாதிகள்... பலர் தலை கொடுத்து வாங்கிய சுதந்திர நாட்டில் வோட்டுக்கு விலை கொடுத்த அரசியல்வாதிகள். தங்கள் அழுக்கு மனங்களை வெள்ளை ஆடை உடுத்தி மறைத்துக் கொள்ளும் அரசியல்வாதிகள்.

இப்படிப்பட்ட அரசியல்வாதிகளிடம் ஆட்சி, அதிகாரத்தைக் கொடுத்து ஏமாந்து விட்டோம், பாலுக்கு காவ

லாகப் பூனைகளை வைத்து விட்டோம். சின்னஞ்சிறு குட்டியாக ஓடி விளையாடிய ஆட்டை, கசாப்புக் கடைக்காரனிடம் கொடுத்ததைப்போல... நாட்டைத் தவறான அரசியல்வாதிகளிடம் விட்டுவிட்டோம்' என்று எண்ணி எண்ணி வருந்தாத நாளே இல்லை. தவறு செய்யும் அரசியல்வாதிகளுக்கு எப்பொழுது தண்டனை கிடைக்கும் என்று மனம் குமுறாத நாட்களே இல்லை. அந்த நாள்... எப்பொழுது வரும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அந்த நாள் தான் நம் நாட்டின் உண்மையான சுதந்திர நாள் என்று நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருப்பேன்.

நீதியும் சட்டமும் மதிக்கப்பட வேண்டும். நேர்மையான அதிகாரிகள் மாற்றப்படும் நிலை மாறி போற்றப்படும் நிலை உருவாக வேண்டும். இனி ஆட்சிக்கு வருபவர்கள் யாராக இருந்தாலும் நேர்மையான ஆட்சியைக் கொடுப்பதற்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

பொது வாழ்வுக்கு வருபவர்கள் தங்களுடைய புது வாழ்வை மறந்துவிட்டு மக்கள் வாழ்வை மட்டுமே நினைக்க வேண்டும். விழிப்புணர்ச்சி அடைந்த மக்கள் மறுபடியும் தூங்காமல் இருந்தால் தான் அப்படி ஒரு சூழ்நிலை உருவாகும். நம்நாடு வளமாகும். அப்பொழுதுதான் என் கனவு நனவாகும்.

என் ரசிகர்களுக்கு, இல்லை தொண்டர்களுக்கு நான் சொல்வது, "உன் ஜாதிக்காரன், உன் மதத்துக்காரன் என்றெல்லாம் பார்த்து உதவி செய்யாதே. அது உதவியேயல்ல. உன் உதவிகள் ஆதரவற்ற ஏழைகளுக்குப் போய்ச் சேரணும். அதுதான் உண்மையான உதவி.

தெருவுக்கு ஒரு கோவில் திறப்பதை விட, தெருவுக்கு ஒரு கல்விக் கூடம் திறப்பது நல்லது. அதனால் எதிர்கால சமுதாயம் விழிப்புணர்வு பெறும். நல்ல சமுதாயமாகவும் அமையும்.

நட்பில் இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர் என்ற பாரபட்சம் எல்லாம் என்னிடம் கிடையாது. நீங்களும் அதே போல எல்லா மதத்தினருடனும் நட்பாக இருக்கணும்."

"நான் மக்களைச் சந்திக்கிறவன், தலைவர்களைத் தேடிப்போய் வாழ்க்கையை உயர்த்திக் கொள்ள வேண்டிய நிலையில் நான் இல்லை. நான் தொண்டர்களைச் சந்திக்கிறவன். மக்களை நம்புகிறவன். நான் யாருக்கும் பயந்துபோய் கொள்கையை மாற்றிக் கொண்டவன் இல்லை. அப்படிப்பட்ட தேவையும் எனக்கில்லை." 1972-ல் புரட்சித் தலைவர் சொன்ன இந்த வார்த்தைகளை எனது கொள்கையாகக் கொண்டு என் பயணத்தைத் தொடர்கிறேன்.

(முற்றும்)

தொகுப்பு :
**சபிதாஜோசப்**

"நயம், தரம் உள்ள நல்லெண்ணெய்னு விளம்பரம் எழுதச் சொன்னேன்..."
"என்ன ஆச்சு...?"
"நயன்தாராவுடைய நல்லெண்ணெய்னு எழுதி இருக்கு...!"
- வசந்தா குருமூர்த்தி

# புக்ஸ்



"ஹாய் ஸ்ரேயா, என்ன புத்தக மூட்டையோட வந்திருக்க..."

"மூட்டையெல்லாம் இல்ல, நாலு புக்குதான். நம்ம எழுத்தாளர், பத்திரிகையாளர், கட்டுரையாளர் ஜி.எஸ்.எஸ். எழுதினது."

"என்ன சப்ஜெக்ட்?"

" 'தேகம் யாவும்' சிறுகதைகள், 'தெரிந்த விளையாட்டு தெரியாத விவரங்கள்' ஸ்போர்ட்ஸ், 'விலங்குகள்' நம்ம கல்கில தொடரா வந்த நாவல், 'ஆப்கானிஸ்தான்... அழிவிலிருந்து வாழ்வுக்கு' கட்டுரை..."

"வெரைட்டியா இருக்கே... படிச்சியா, இல்லையா?"

"படிக்காம யாராவது பேசுவாங்களா? ஒவ்வொரு புக்குமே ஒவ்வொரு விதத்துல ஸ்பெஷல்தான். எல்லாவிதமான எழுத்திலும் ஜி.எஸ்.எஸ். மிளிர்றார். ஒரே நேரத்துல இப்படி நாலுவிதமான புத்தகம் வந்திருக்கறது பெரிய விஷயம். எல்லாமே நல்ல உள்ளடக்கத்தோட, தரமான தயாரிப்பா இருக்கு."

"நான்கூட மூணு புக்கு கொண்டு வந்திருக்கேன். கவிஞர் நா.முத்துக்குமாரோடது. 'அனா ஆவன்னா' கவிதை, 'கண் பேசும் வார்த்தைகள்', 'பால காண்டம்' ரெண்டும் கட்டுரைகள்."

"ஹவ் இஸ் இட்?"

"அவரோட பாட்டுங்க மாதிரியே இனிமையா, புரியற மாதிரி இருக்கு. உயிர்மை பதிப்பகம் வெளியிட்டிருக்கு, தரத்துக்குக் கேக்கவே வேணாம்."

"எல்லாம் சரி, நீயும் நானும் எப்போ இந்த மாதிரி புக்ஸ் போடறது?"

"எடைக்குத்தானே? வா, உன் வீட்டுக்குப் போய் காலேஜ் புக்ஸை போடுவோம்!"

"டேய், உன்னை!"

- தேகம் யாவும் / ஆப்கானிஸ்தான்... அழிவிலிருந்து வாழ்வுக்கு....
  - கிழக்கு பதிப்பகம், 16, கற்பகாம்பாள் நகர், சென்னை - 4
- விலங்குகள், தனலெட்சுமி பதிப்பகம், 8, மாசிலாமணி தெரு, சென்னை-17
- தெரிந்த விளையாட்டு! தெரியாத விவரங்கள், சேது அலமி பிரசுரம், 8, மூத்து கிருஷ்ணன் தெரு, சென்னை-17
- 'அ'னா ஆவன்னா / கண் பேசும் வார்த்தைகள் / பால காண்டம், உயிர்மை பதிப்பகம், 11/29, சுப்ரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை - 18



















# ஜூன்-R

ஹீரோக்களின் காலடியில் விழுந்து கிடக்கும் கோலிவுட்டில், ஹீரோயின்களை வைத்துப் படம் தந்திருக்கும் ரேவதி எஸ். வர்மாவின் தில்லுக்கு ஒரு சல்யூட்!

இந்நாள் கதாநாயகி ஜோதிகா, முன்னாள் கதாநாயகிகள் குஷ்பு, சரிதா மூவரும், கதகதப்பான தாய்ப்பாசக் கதையை மூச்சு முட்டாமல் முதுகில் சுமந்து அசத்தியிருக்கிறார்கள்.

மழையை எங்கே கண்டாலும் ஜூனுக்கு ஒரே கொண்டாட்டம்.



'மழையே மழையே... நீரின் திரையே...!' என்று குழந்தையாகி குதியாட்டம் போடுகிற நாயகி, சிசுவாக இருக்கும்போது பெற்றதாயாலேயே கருணை இல்லத்தில் விடப்படுகிறார்.

வளர்ந்து படித்து பெரிய மனுஷியாகி, கார், வீடு, கைநிறைய சம்பளம் என்று வாழ்க்கை நிறைவாகிவிட்டாலும் தாய்ப்பாசத்துக்காக ஏங்குகிறார்.

அம்மாக்கள் குழந்தையைத் தத்தெடுக்கும் வழக்கம் இருக்க, அதற்கு மாறாக சரிதாவை தனது தாயாக மானசீகமாகத் தத்தெடுத்து வீட்டுக்கு அழைத்து வருகிறார். குழந்தைகள், குடும்பம் என்று வாழ்ந்த ஒரு பெண்மணியை, அம்மாவாக்கிக் கொண்டால் சும்மா இருக்குமா அவரது சொந்த பந்தம்?

வாராது வந்த தாயை ஜூன் தக்கவைத்துக் கொண்டாரா இல்லையா? அதுதான் மிச்சக் கதை!

சந்திரமுகியாக பயமுறுத்திய சூடு ஆறும் முன்பு, ஜூன் ஆர் கேரக்டரில் உள்ளத்தைக் கரைக்கிறார் துறுதுறு ஜோ!

ஜூன் சரி, அதென்ன ஜூன் ஆர்? இனிஷியல் தெரியாத ஜூனை திருமணம் செய்து கொள்ள, ராஜா என்ற இளைஞர் தவமாய்த் தவமிருக்கிறார். புத்திசாலி டைரக்டர் அவரது குரலை மட்டும் ஒலிக்கவிட்டு, கடைசி காட்சியில் தான் அவர் சூர்யா என்ற முடிச்சை அவிழ்க்கிறார். ஆனால் ரசிகர்களுக்கு முன்பே அந்த முடிச்சு தொபுக்கடீர் என்று அவிழ்ந்து விடுகிறது.

படத்தில் இயக்குநரைப் போல ஃப்ரெஷ்ஷாகத் தெரியும் இன்னொரு அறிமுகம், இசையமைப்பாளர் ஷரத்.

சின்னத் திரையில் முடங்கிவிட்ட தாய்க்குலங்களை தியேட்டர்களுக்கு இழுக்கும் தாய்ப்பாசக் காந்தம் ஜூன் ஆர்.

- **லஜ்ஜாவதி**

 தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** தேர்வில் அதிக மதிப்பெண்களை அடைவீர்கள். சிலருக்கு வீடு , வாசல் வாங்கும் யோகம் கிட்டும். பொருளாதார விருத்தி ஏற்படும். மனசலனம் தீரும். திருமண காரியம் கைகூடும். மகப்பேறு பெறும் பாக்கியம் கிட்டும். கணவன் - மனைவி உறவு நற்பலனை அளிக்கும். குழந்தைகள் வழியில் சந்தோஷமான காரியம் நடக்கும். ஊதிய உயர்வு கிடைக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் தொடங்க ஏற்ற காலம். ஆஞ்சநேயர் காயத்ரி மந்திரம் படித்து வர நற்பலன் பெருகும். இந்தவார அதிர்ஷ்ட எண்கள். 1, 3, 9.

**ரிஷபம்:** வைத்தியச் செலவு விலகும். மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும். முயற்சிக்கும் காரியத்தில் பலிதம் உண்டாகும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் மாற்றம் ரெடி. புதிய வேலை கிடைக்கும். சத்ரு தொல்லை மறையும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். நெருங்கிய நண்பர் / உறவினர் இடம் மாறிச் செல்வார்கள். உடல்நிலையில் தொந்தரவு இருக்காது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வரவும். அதிர்ஷ்ட எண்கள்: 1, 5

**மிதுனம்:** திருமண காரியம் கைகூடும். மனத்தில் சந்தோஷம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பணகஷ்டம் வராது. வீடு, வாசல் வாங்க நல்ல காலம். செலவுகள் சுபமானதாக இருக்கும். குழந்தைப்பேறு கிட்டும். மனசலனம் தீரும். உத்தியோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு ஏற்படும். சிலருக்கு புதிய வேலை கிடைக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். வேலைப்பளு குறையும். ராகு / கேது வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 5, 6.

**கடகம்:** நினைத்தது நடக்கும். பொருளாதார கஷ்டம் இருக்கும். தனவரத்து ஏற்படும். சிலருக்கு வீடு / வாசல் வாங்கும் யோகம் அமையும். தொழில் ஸ்தானத்தில்

# நடக்குமென்பார்; நடக்கும்!















நல்ல முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். தொலைதூரப் பிரயாணம் வந்து சேரும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். மாணவ / மாணவியர்கள் நற்பலனைப் பெறு வார்கள். வியாபாரிகள் தொழில் அபிவிருத்தி செய்ய ஏற்ற காலம். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும். அதிர்ஷ்ட எண்கள்: 1, 5.

**சிம்மம்:** எண்ணங்கள் நிறைவேறும். தடைகள் விலகும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் விலகும். பணவரவு இருக்கும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தி யோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். வண்டி / வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. நெருங்கிய உறவி னர்கள் / நண்பர்களிடம் மனஸ்தாபம் வரலாம். திருமண காரியம் கைகூடும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 1, 5

**கன்னி:** படிப்பில் மேன்மை பெறுவீர் கள். லட்சியங்கள் நிறைவேறும். தனவரத்து ஏற்படும். உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். எதிரிகளின் தொல்லை இருக்காது. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக் கும். தைரியமும் தன்னம்பிக்கையும் மிகுந்து காணும். வேலை வாய்ப்புக் கிடைக்கும். தொழில் துறையில் நல்ல லாபம் ஏற்படும். புதிய தொழில் துவங்க ஏற்ற நேரம். பூர்விக சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். வீடு / வாகனம் வாங்கலாம். ராகு / கேது வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 5, 6.

**துலாம்:** வாக்கு, தனம் மேலோங்கும். வழக்கு வெற்றி அளிக்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். தீர்க்க முடியாத பிரச்னைகள் தீர்வு காணும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்தி யோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு ஏற்படும். இடமாற்றம் உண்டு. வியாபாரிகளுக்கு தொழில் நல்ல லாபம் காணும். புதிய தொழில் தொடங்க ஏற்ற நேரம். தனவிருத்தி ஏற்படும். குரு / சனி வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 5, 6.

**விருச்சிகம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். தனம், குடும்பம், வாக்கு மேலோங் கும். நீண்ட கால எண்ணங்கள் யாவும் ஈடேறும். குடும்பத்தில் சுபகாரிய பேச்சு வார்த்தை நற்பலனைத் தரும். நண்பர் / உறவி னர்கள் மூலம் ஆதாயம் கிடைக்கும். பூர்விக சொத்துக்கள் பாகப்பிரிவினை ஏற்படும். புதிய வீடு, வாசல் வாங்க நல்ல காலம். புதிய தொழில் துவங்க நல்ல நேரம். பத்திரிகையில் பெயர் வரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக் கும். ராகு / கேது வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 1, 3, 9

**தனுசு:** பணகஷ்டம் வராது. நீண்டகால கனவு நிறைவேறும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. குடும்ப வாழ்வு நற்பலனைத் தரும். வீடு வாசல் வாங்க நல்ல காலம். எதிரி களின் தொல்லை இருக்காது. கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். வேலைகளில் மாற்றம் வரலாம். புதிய தொழில் துவங்க ஏற்ற நேரம். வாக்குவன்மை மேலோங்கும். மாணவ / மாணவியர்கள் படிப்பில் நல்ல மதிப்பெண்களை வாங்குவார்கள். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும். அதிர்ஷ்ட எண்கள்: 3, 9

**மகரம்:** நீண்டகால எண்ணங்கள் யாவும் ஈடேறும். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். நோய் நொடிகள் இராது. வழக்கு வெற்றி பெறும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி, உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் இடமாற்றம் உண்டு. வெளியூர்ப் பிரயா

# பரத்வாஜ் பதில்கள்

● **எங்கள் கடன் தொல்லை எப்போது நீங்கும்? என் சரும வியாதி சரியாகுமா? என் பெண்ணின் மணவாழ்க்கை எப்படி அமையும்?**

**- பெயர் வெளியிட விரும்பாத புதுப்பெருங்களத்தூர் வாசகி**

தற்போது உங்கள் கணவருக்கு சனிதசை நடைபெற்று வருகிறது. சனிதசை சுக்ரபுத்தி விலகி, சூரியபுத்தி ஆரம்பிக்கும் காலம் கடன் தொல்லை தீரும். அதன்பிறகு வீடு வாங்கும் யோகம் இருக்கிறது. உங்கள் ஜாதகப்படி, புதன் தசை முடிவடைந்து கேதுதசை ஆரம்பிக்கும்போது சரும வியாதி குணமாகும். உங்கள் பெண்ணுக்கு வெளிநாட்டு வரன் அமையும். 25 வயதில்

திருமணம் நடக்கும். மணவாழ்வு நன்றாக அமையும்.

**● எனது மகள் பி.ஈ. முடித்துவிட்டு வேலையில்லாமல் இருக்கிறாள். அவளுக்கு வேலை கிடைக்குமா? திருமணம் எப்போது முடிக்கலாம்?**

**- பெயர் வெளியிட விரும்பாத மேற்கு மாம்பலம் வாசகர்**

தங்கள் பெண் ஜாதகத்தில் 25 வயது 7 மாதம் 22 நாள் வரை சுக்ரதசை நடக்கும். சுக்ர தசை என்பது ஜாதகருக்கு எதிலும் எதிர்ப்பு, தடை, தடங்கல் என்று மாறி மாறி தொல்லை கொடுக்கும். எங்கு சென்றாலும் போட்டா போட்டி இருக்கும். இருந்தாலும் வெளிநாட்டு நிறுவனத்தில் இன்னும் ஒரிரு மாதங்களில் வேலை கிடைக்கும். 25 வயதுக்குப் பிறகு திருமணம் செய்வது நற்பலனை அளிக்கும். நாகதோஷம், செவ்வாய் தோஷம் உள்ள வரனைப் பார்த்துச் சேர்ப்பது நல்லது.

**● என் மகனுக்கு எப்போது குழந்தைப் பேறு கிடைக்கும்?**

**- எம்.வெங்கடேசன், மதுரை**

உங்கள் மகனுக்கு 2006-ல் குழந்தைப் பேறு ஏற்படும். பரிகாரம் தேவையில்லை.

**● எனது மகனின் திருமணம், தொழில் பற்றிக் கூறவும்...?**

**- கே. சீனிவாசன், சென்னை - 28**

தங்கள் பையனுக்கு வெளிநாட்டுப் பணி நன்றாக இருக்கும். தற்சமயம் ராகுதசை, புதன்புத்தி நடப்பதால் திருமணம் நடைபெற நல்ல காலம். இல்லறவாழ்வு, எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**● என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

**- ஆர்.வி.ஜெயராமன், சென்னை**

உங்கள் பெண்ணுக்கு 2007-ல் திருமணம் நடக்கும். வெளியூரில் பிறந்த வரன் அமையும். தோஷம் எதுவும் இல்லை.

**● எனது மகனுக்கு திருமணம் மற்றும் வேலை எப்போது கிடைக்கும்? எப்படி அமையும்?**

**- கு.வ.பெருமாள், தூத்துக்குடி - 8**

உங்கள் மகனுக்கு 2006-ல் தனியார் நிறுவனத்தில் நல்ல வேலை கிடைக்கும். 2007-ல் திருமணம் நடக்கும். படித்த, பண்புள்ள, நல்ல வேலையிலுள்ள பெண் அமையும்.

ணங்கள் ஏற்படும். சிலருக்கு வீடு, வாகனம் வாங்கும் யோகம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல பலன் அடைவீர்கள். செலவுகள் நற்பலனைத் தரும். ராகு / சனி வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 5, 6.

**கும்பம்:** நீண்ட நாள் பிரச்னை முடிவுக்கு வரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வாக்கு வாதம் வேண்டாம். உடல் நிலையில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. கைப்பொருள் மீது கவனம் தேவை. எதிரிகள் தொல்லை இருக்காது. குழந்தைகள் வழியில் சந்தோஷமான காரியம் நடக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பத்திரிக்கையில் பெயர் வரும். ராகு / கேது வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 5, 6.

**மீனம்:** தடைகள் விலகி நற்பலனைப் பெறும் வாரம். மனத்தில் தைரியமும், துணிவும் ஏற்படும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். புதிய பதவி கிடைக்கும். வேலையில் ஊதிய உயர்வு ஏற்படும். கணவன்-மனைவி விட்டுக் கொடுத்துப் போகவும். உடல்நிலை பாதிக்காது. பணகஷ்டம் நீங்கும். வியாபாரிகள் தொழில் அபிவிருத்தி அடைவார்கள். வீடு வாங்க உகந்த காலம். செலவுகள் சுபமானது. திருமணம் கைகூடும். குரு / ராகு / கேது வழிபாடு சிறந்தது. அதிர்ஷ்ட எண்கள்: 3, 9

# குறையொன்றுமில்லை

முதல் கேள்வியே பிரும்மாஸ்திரமாக இருக்கிறது இங்கே! பதில் சொல்ல முடியவில்லை. அடுத்த கேள்வி எப்படி இருக்குமோ? என்று ஆக்கி ஆழ்வார் மிரள்கிறார்.

குழந்தை கேட்கிறது :

"இதோ உட்கார்ந்து கொண்டிருக்கிறாரே இந்த மகாராஜா, இவர் ஸார்வ பௌமன்" என்றது.

அப்போது ஆக்கி ஆழ்வார் என்ன பதில் சொல்ல வேண்டும்...? 'இவர் ஸார்வபௌமன் இல்லை' என்றல்லவா சொல்ல வேண்டும். ராஜாவினிடத்திலே ஆஸ்தான வித்வானாக இருந்து கொண்டு அவ்வளவு பெரிய சபையிலே அவர் ஸார்வபௌமன் அல்ல என்று சொன்னால் என்ன நடக்கும்?.... சிரச்சேதம்தான் நடக்கும்!

அதனால் ஆக்கி ஆழ்வானுக்குப் பதில் சொல்ல நா எழவில்லை. அதிலேயும் விழித்துக்கொண்டு நின்றார்.

மூன்றாவது கேள்வி ரொம்ப விபரீதமான கேள்வி. "இந்த மூன்றாவது கேள்வியைக் கேட்கட்டுமா?" என்று குழந்தை கேட்கிறது. அவர் நடுநடுங்கிப் போய் விட்டார். வாயே எழவில்லை. இருந்தாலும் அது மூன்றாவது கேள்வியைக் கேட்கிறது :

"இதோ இருக்கிற ராஜ பத்னி மஹா பதிவ்ரதை" என்கிறது குழந்தை.

அப்போது அவர் என்ன பதில் சொல்ல வேண்டும். அவள் பதிவ்ரதை அல்ல என்றல்லவா மறுத்துச் சொல்ல வேண்டும். இதற்கும் பதில் சொல்ல முடியவில்லை அவரால்.

ஒரு கேள்விக்கும் பதில் சொல்ல முடியாமல் தவிக்கிறார் ஆக்கி ஆழ்வார். அப்போது நினைக்கிறார் - 'என் வித்யா கர்வமே இப்படி ஒரு சிறிய பிள்ளை வடிவமாக வந்து என்னைப் பரீக்ஷிக்கிறது. கடுகு சிறுத்தாலும் காரம் போகவில்லை என்கிற மாதிரி, இத்தனை துளியூண்டான சிறுவன் என்னைக் கேள்வி கேட்கிறான்.'

ஆனால் அவருக்கு இத்தனை பட்ட பிறகும் புத்தி வரவில்லை. "இதெல்லாம் என்னைக் கேட்டாயே... உனக்கு இதற்கெல்லாம் பதில் தெரியுமா?" என்று கேட்கிறார்.

"விடை தெரியாமலா உன்னிடம் நான் கேள்வி கேட்டேன்?" என்றது குழந்தை.

"அப்படியானால் சொல். பதில் சரியாகச் சொல்விட்டாயானால் உனக்கு நான் அடிமை" என்கிறார் ஆக்கி ஆழ்வார்.

அப்போது அந்தக் குழந்தை பதில் சொல்ல ஆரம்பித்தது. முதல் சவாலுக்கு அது பதில் சொன்னவுடனேயே சபை முழுக்க கைதட்டி விட்டது. ஆக்கி ஆழ்வானே கை தட்டி விட்டார், அவரையும் அறியாமல்.

ஒரு மரம் தோப்பாகாது என்று சொல்வார்கள். ஒரு பெண் வந்து சேவிக்கும்போது வேதம் சொல்லும் ஆசி மந்திரத்தில், "பத்துப் பிள்ளைகளை நீ பெற வேண்டும். பதினொராவது பிள்ளையாக உன் பர்த்தாவை (கணவனை) நீ பாவிக்க வேண்டும்" என்று வருகிறது.

கடைசி பிள்ளையினிடத்திலே தாயாருக்கு அன்பு மிகுதியாக இருக்குமாம். ஆகையினாலே, பர்த்தாவினிடத்திலே அன்பு குறையாமல் வளர வேண்டும் என்று வேதம் அனுக்கிரஹம் பண்ணுகிறது.

வேதத்தின் வாக்குபடி பத்துப் பிள்ளைகள் பெற வேண்டும் என்று ஆசி இருப்பதால் ஒரு பிள்ளையைப் பெறுவதன் மூலம் மலட்டுத் தன்மை நீங்காது என்கிறது, சாஸ்திரம். நிறைய பிள்ளைகள் பிறக்க வேண்டும் என்கிறது.

இங்கே ஆக்கி ஆழ்வான் ஒரே பிள்ளை தன் அம்மாவுக்கு. ஆகையி

னாலே அதை உணர்ந்து, அந்த தர்க்கப்படி தனது கூற்றை நிரூபித்தது அந்தச் குழந்தை.

ஆக்கி ஆழ்வானுக்கு ஆச்சர்யம். மூக்கிலே விரலை வைத்தார்.

அடுத்து, 'இந்த ராஜா ஸார்வபௌமன் இல்லை' என்று சொல்ல வேண்டும்.

ஸார்வபௌமத்துவம் என்றால் எது...? எவனுடைய பரிபாலனத்தில் சூர்யன் அஸ்தமிக்காமலிருக்கிறானோ அவனை ஸார்வபௌமன் என்று சொல்லலாம்.

பல த்வீபாந்தரங்களிலே இவன் பரிபாலனம் நிகழ



எட்டாம் பாகம் 9

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

வேண்டும். அம்பரீஷ சக்கரவர்த்தியை ஸார்வ பௌமன் என்று சொல்கிறார் சுகபிரும்மம். ஏனென்றால் பல த்வீபங்களிலே அவன் பரிபாலனம். அவன் கொடி பறக்கிறது அங்கெல்லாம். அப்படிப் பல இடங்களிலே பரிபாலனம் பண்ணக்கூடிய பெரிய ராஜாவைத்தான் ஸார்வ பௌமன் என்று சொல்லலாமே யொழிய சோழ நாட்டுக்கு மட்டும் அதிபதியான ஒருவனை ஸார்வபௌமன் என்று அழைக்க முடியாது. அந்தப் பக்கத்தில் சேர நாட்டிலே இவன் காலை வைத்தால் வெறுமே இருப்பார்களா? பாண்டிய நாட்டிலே காலை வைத்தால் சும்மா இருப்பார்களா? ஒரு பரிமிதமான - வரையறுக்கப்பட்ட - பிரதேசத்துக்கு ராஜா இவர். ஸார்வபௌமன் என்று இவரை எப்படிச் சொல்ல முடியும்? அந்த ராஜாவே அதை ஒப்புக்கொள்ள வேண்டுமே!

மேலும், பாவமே இல்லாதவனைத்தான் ஸார்வபௌமன் என்று சொல்லலாம். ராஜா பாவம் பண்ணவில்லையென்றால் கூட, ஜனங்கள் பண்ணுகிற பாவம் ராஜாவுக்குப் போய்ச் சேரும். ராஜா பண்ணுகிற பாவம் யாருக்குப் போய்ச் சேரும் என்று கேட்டால், அந்த தேசத்தின் புரோஹிதர்களுக்குத்தான் போய்ச் சேரும்!

அப்படியானால் புரோஹிதர்களுக்கு எவ்வளவு பொறுப்பு இருக்கிறது பாருங்கள்! ராஜாவினிடத்திலே தர்மத்தை எடுத்துச் சொல்லி, இன்னின்ன நேரத்தில் இன்னின்ன காரியம் பண்ணவேண்டும் என்று சொல்லி நல்ல காரியத்தை நடத்தி வைத்துக்கொண்டே இருக்க வேண்டும் புரோஹிதர்கள். இல்லையானால் அந்த ராஜாவுக்குப் பாவம் சம்பவிக்கும்; அதுவே புரோஹிதர்களுக்கும் வந்து சேரும்.

இந்த சாஸ்திரப்படி ஜனங்கள் பண்ணுகிற பாவம் ராஜாவுக்குப் போய்ச் சேருமானதனாலே அவன் பாவம் இல்லாதவன் என்று எவ்வாறு சொல்ல முடியும்.

ஆகையினாலே, இந்த இரண்டு காரணங்களினாலும் அவன் ஸார்வ பௌமன் அல்ல. "ஸார்வபௌமத்துவம் சித்திக்காது" என்று சொல்லி விட்டது அந்தக் குழந்தை!

உடனே ராஜா அதை ஒப்புக் கொண்டான். இதிலே சந்தேகம் என்ன இருக்கிறது? வாஸ்தவம் தானே என்றான்.

**அ**டுத்த கேள்வி – இந்த ராஜபத்னி பதிவிரதை! பதிவிரதை அல்ல என்று நிரூபிக்க வேண்டும்!

பொது தர்மம் என்று சாஸ்திரத்தில் சொல்வார்கள். அதைக் கொண்டு பார்த்தால் பதிவ்ரத்யதுக்கு பங்கம் ஏற்படாது இங்கே. பங்கம் ஏற்படாமலே வாதிடலாம். அப்படியான உயர்ந்த தர்மம் அது. உட்கண்ணால் இதைப் பார்க்க வேண்டும்; புறக்கண்ணால் அல்ல.

கல்யாணத்தின்போது இப்போது கூட ஒரு ஹோமம் நடக்கிறது. மிக முக்கிய



"போலீஸ் நாயோட காலுக்கு விலங்கு போட்டது யாரு?"

"கபாலி வீட்டுக்கு அடிக்கடி வாலாட்டிக்கிட்டே ஓடிப் போயிடுதுன்னு ஏட்டு ஏகாம்பரம்தான் மாட்டி விட்டிருக்கார்!"

– அம்பை தேவா

மான மந்திரங்கள் அச்சமயம் ஓதப்படுகின்றன.

ஒரு பெண்ணாக பூலோகத்தில் பிறவி அடைகிறபோது, அந்தப் பெண் முதலில் ஸோம லோகத்திலே சந்திரனிடம் இருக்கிறாள். சந்திரன் என்ன பண்ணுகிறான். அவளை கந்தர்வர்களிடத்திலே ஒப்படைக்கிறான். கந்தர்வர்கள் அவளை அக்னியினிடத்திலே ஒப்படைக்கிறார்கள். "அக்னி சாக்ஷியாக இந்தப் பெண்ணை இந்த மனுஷ்யனான வரனுக்கு நான் கொடுக்கிறேன்" என்று அக்னி சொல்கிறான். அக்னி சொன்னவுடனே அதை வழிமொழிகிறவன் யார்...? ததாஸ்து என்று சொல்பவன் யார் என்றால் வாயு பகவான். அவன் ஆமோதிக்கிறான் - வழிமொழிகிறான்.

ஒருத்தரை "இந்த சபைக்குத் தலைவராயிருக்க நான் முன்மொழிகிறேன்" என்கிறார் ஒருவர். உடனே இன்னொருத்தர் அதை வழிமொழிகிறார். இந்த உலகத்திலே ஓர் அத்யக்ஷரைத் தேர்ந்தெடுப்பதும் மற்றவர் ஆமோதிப்பதும் - எல்லாமே வேத வழக்குதான்.

வேதத்திலே அக்னி 'ததாமி' என்று சொல்கிறான். அக்னி பிரேரேபிப்பதை வாயு வழிமொழிகிறான்.

ஆகவே, ஸோமதேவனிடத்திலிருந்து கந்தர்வர்களிடம் போய் அங்கிருந்து அக்னியிடத்திலே வருகிறாள் ஒரு பெண். அப்புறம்தான் ஒரு மனுஷ்யனுக்கு வாழ்க்கைப்படுகிறாள்.

"அந்த ரீதியிலே இந்த ராஜபத்னி - இங்கே உட்கார்ந்திருக்கிறாளே, அவளும் ஸோம லோகத்தில் (சந்திரனிடம்) இருந்தவள். கந்தர்வ லோகத்தில் இருந்தவள்; அக்னியினிடம் இருந்தவள்; அதன்பின் ராஜாவுக்கு வாழ்க்கைப்பட்டவள்..." என்று அந்தக் குழந்தை சொன்னவுடனே, அரைமணி நேரம் கைதட்டல் ஓசை கேட்டது சபையிலே.

அந்த மேதா விலாசத்தைக் கேட்டு, கண்டு, "என்னை ஆளவந்தீரோ?" என்று ஓடிவந்து அந்த ராஜ பத்னி அந்தக் குழந்தையைக் கட்டிக் கொண்டாள். அதனால் ஆளவந்தார் என்று திருநாமம் அவருக்கு.



"ஏன் சுத்திவளைச்சுப் பேசுறீங்க... 'பைபாஸ் ரோடு காண்டிராக்ட்' எப்படிக் கிடைச்சுதுன்னு ஸ்டிரெய்ட்டா கேட்டுட வேண்டியதுதானே...!"
- கேஜி.எஸ்

சின்ன வயதிலிருந்தே ஆளவந்தாருக்கு அவ்வளவு பிரக்ஞை. அப்படிப்பட்ட ஆளவந்தாரால் இயற்றப்பட்ட ஸ்தோத்திரம் இருக்கிறது பாருங்கள், அதற்கு ஸ்தோத்திர ரத்தினம் என்று பெயர்.

அந்த ஆளவந்தார் ஸ்தோத்திரத்தை யார் படித்து ஞானம் அடைகிறார்களோ, அவர்கள் பரம வைராக்கிய நிதிகளாக, தெளிந்த ஞானமுடையவர்களாக இருப்பார்கள். சந்தேகமே அவர்கள் மனத்தில் ஏற்படாது.

இந்த ஆளவந்தார் ஸ்தோத்திரத்திலே, பராசர மஹரிஷியை ஆளவந்தார் கொண்டாடுகிறார்...

(வளரும்)



**நா**ளை மறுநாள் திருமணம்!

இன்னும் நகைகள் வாங்கவில்லை. எப்படியும் இன்று பணத்தோடு வருவதாகக் கூறி விட்டுப் போனார் என் கணவர். அவரைத் தான் எதிர்பார்த்து காத்துக் கொண்டிருக்கிறேன்.

சொந்தக்காரர்கள் எல்லோருமே நல்ல வசதியானவர்கள். கார், பங்களா என்று இருப்பவர்கள். உடம்பெல்லாம் நகைகளைப் பூட்டிக் கொண்டு வருவார்கள். அவர்கள் மத்தியில் நான் மட்டும் எப்படி வெறும் தாலிக் கொடியோடு போக முடியும்?

காதல் திருமணம் செய்து கொண்டால், எங்கேனும் உறவுகளுக்குத் தெரியாத தூரத்தில் குடித்தனம் போய்விட வேண்டும். கிட்டத்தில் இருந்து கலங்கக் கூடாது.

என் கணவரும் ஒரு வகையில் தூரத்துச் சொந்தம்தான். வசதிக் குறைவு என்பதால் அவருக்கு என்னைக் கட்டி வைக்க மறுத்துவிட்டார்கள். ரகசியத் திருமணம் செய்துகொள்ள வேண்டியதாகி விட்டது.

இரண்டு ஆண்டுகள் ஓடிவிட்டன என்றாலும் அம்மா அப்பாவுக்கு கோபம் மட்டும் குறையவில்லை. தம்பி சிவப்பிரகாசம் ஒரு முறை ஆஸ்பத்திரி வாசலில் பார்த்துக் கலங்கியேவிட்டான். "உனக்கு ஏன் இந்தத் தலைவிதி. என்ன பெரிய காதல்? மகாராணி மாதிரி வாழ வேண்டியவ... இப்படி இருக்கியே..." என்றான். "எனக்

கென்னடா? நல்லாதான் இருக்கேன்.." என்றேன். அதற்கு அவன் சொன்னான். "உன் முகமே காட்டிக் கொடுக்குதே அக்கா. இதெல்லாம் நாம கட்டற புடைவையா. கழுத்துல என்ன மணி?" என்று கேட்டபடி ஐந்நூறு ரூபாய் கொடுத்தான். "எனக்கு வேணான்டா.." என்று மறுத்து விட்டு வந்தேன்.

தம்பி என்றில்லை, எல்லா உறவுக்காரர்களையும் எதேச்சையாக வழியில் பார்த்தால், பார்க்க நேரிட்ட தர்மசங்கடத்துக்காக இரண்டு வார்த்தை பேசிவிட்டு நகர்வார்கள்.

இப்போதுகூட திருமணத்துக்குதான் பத்திரிகை வைத்தார்களே தவிர அதற்கு முன் நடந்த எந்த விசேஷத்துக்கும் அழைப்பில்லை. வசதியாக இருந்திருந்தால் சின்ன விசேஷம்கூட விடாமல் அழைத்திருப்பார்கள்.

இந்தத் திருமணத்துக்குக்கூட போக வேண்டாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் மனசு கேட்கவில்லை. நல்லதுக்கும், கெட்டதுக்கும் நாலு பேர் வேண்டுமே. அதனால் போக முடிவு செய்தோம்.

நா.கோகிலன்

**எ**ங்கேயோ அலைந்து திரிந்து பணத்தோடு வந்தார். அப்போதே போய் நகை எடுத்து வந்தோம். அகல ஜரிகை வைத்த பட்டுப் புடைவை, புது நகைகள் அணிந்து ஆட்டோவில் போய் இறங்கியதும் ஒரு வித கர்வம் வந்தது. அவ்வளவு அழகாக இருந்தது. பலருடைய ஆச்சரியப் பார்வை எங்கள்மீது விழுவதும், அகல முடியாமல் நிற்பதும் என்னால் உணர முடிந்தது.

'திவ்யா பரவாயில்லை. நல்ல வசதியாயிட்டா போல இருக்கு. தகதகன்னு ஜொலிக்கிறா பாரேன்' என்று மனசுக்குள் நினைத்துக் கொள்வார்கள். ஒன்றிரண்டு பேர், நேரிடையாகவே பாராட்டலாம் என்று உற்சாகத்தோடு நினைத்துக் கொண்டிருந்தபோது, சித்தியின் இரண்டாவது பெண் சுஜாதா, ஓடோடி வந்து தோளை அணைத்துக் கொண்டாள்.

"திவ்யா அக்கா! நீ கவரிங் நகையைப் போட்டாலும் தங்கம் மாதிரித் தெரியுது" என்றாள்.

எனக்கு பளாரென்று கன்னத்தில் அறைந்த மாதிரி இருந்தது. நெக்லஸும் ஆரமும் கழுத்தை நெரிப்பது போல உறுத்தின.

# தகதக திவ்யா!



# அம்மாவுக்கு புதுப் பட்டம்!

“அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பது பழமொழி. மிரண்டவன் கண்ணுக்கு தெரிவதெல்லாம் தேர்தல் என்பது புதுமொழி” - இது அம்மா எடுத்துவிட்ட லேட்டஸ்ட் பொலிட்டிகல் பஞ்ச். கலைவாணர் அரங்கத்துல போன வாரம் நம்மூர் கலைஞர்களுக்கு அம்மா 'கலைமாமணி' பட்டம் வழங்கினாங்க... அந்த விழாவுலதான் இந்த 'பஞ்ச்'-ஐ அம்மா, பலத்த சத்தத்துக்கு (அதாங்க கைத்தட்டல்!) இடையில அள்ளிவிட்டாங்க.

கடுமையான பாதுகாப்பையும் தாண்டி, ஒரு வழியா உள்ளே போனா சியான், சூர்யா, கே.எஸ். ரவிகுமார், ஹரிஹரன், கிரேஸி மோகன், ஓ.எஸ். அருண், வடிவேலு, தென்கச்சியார்னு ஒரு பெரிய பட்டாளமே டெண்ட் போட்டிருந்தாங்கப்பு. நம்ம 'சர்ச்சை' சினேகா குடும்பத்தோட வந்திருந்தாங்க. சினேகாவுக்கு மட்டும் சியானுக்குப் பக்கத்துல ஜம்முன்னு சீட்டு கிடைச்சது. ஆனா சீட்டு கிடைக்காம தவிச்சுக்கிட்டு இருந்த தன்னோட அக்கா, அம்மாவைத் திரும்பித் திரும்பி பார்த்துக்கிட்டே இருந்தாங்க... பாவம்!




'கஜினி' வந்து ரொம்ப நேரமாகியும் 'ஜோ' கண்ணுலயே படல... ஒருவழியா கலர்ஃபுல் புடைவையில சும்மா ஜிவ்வுன்னு வந்தாங்க 'ஜோ'. சூர்யா பக்கத்துல ஒரு சீட் காலியா (!) இருந்துச்சு... அதுல வந்து சிட்டிங் போட்டாங்க 'ஜோ'. ஒட்டுமொத்த கூட்டமும் இவங்களைத்தான் பார்த்துக்கிட்டு இருந்துச்சு.

'ஓடி ஓடி உழைக்கணும்'ங்கறதை ஒழுங்கா புரிஞ்சு, நடக்கறது நம்ம தமிழ்நாட்டு மந்திரிங்கதான்....அம்மா மேடைக்கு வர்றதுக்குள்ள வாசலுக்கும், மேடைக்கும் ஓட்டமும் நடையுமா இருந்

தாங்கப்பு சி.வி. சண்முகமும், ஜெயக்குமாரும்... அவங்க ஓடுறதைப் பார்த்தா நமக்கு பிபி எகிறுது.

மேளதாளம் முழங்க அம்மா மேடைக்கு வந்தாங்க... நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கியவரு, வி.ஆர்.எஸ் வாங்கிட்டு அம்மா கட்சியில 'அவைப் புலவரா' ஜாயின் பண்ணிடலாம்... அந்த அளவுக்கு ஏத்த இறக்கமா 'அம்மா போற்றி' படிச்சாருப்பு ... நம்ம 'குங்குமப் பொட்டு' குன்னக்குடி, அம்மாவுக்கு ஏகத்துக்கும் கும்பிடு போட்டு, 'அனுக்ரஹ நாயகி'ன்னு ஸ்பெஷல் டைட்டில் கொடுத்தாரு. அம்மாவுக்கு சால்வை போர்த்தின மாதிரி குன்னக்குடி, மந்திரி சண்முகத்துக்கும் சால்வை போட வர, அப்படியே பதறிப் போயிட்டாரு மந்திரி. 'கபால்'னு சால்வையை வாங்கி, தூர வச்சுட்டு, சீட்டுல பம்மிட்டாரு... எம்புட்டு உஷாரா இருக்காங்க பாருங்க!







அம்மா பேசுனப்போ, தாம் எப்படியெல்லாம் 'கலைஞர்'களுக்கு நல்லது பண்றார்... பண்ணினார்னு ரொம்ப வெலாவாரியா புள்ளி விவரத்தோட பேசினாங்க... அதோட ஒரு பொலிட்டிகல் குட்டிக் கதையையும் எடுத்துவிட்டாங்க. தேர்தல் கண்ணோட்டத்தோடு விருது தர்றதா வந்த விமர்சனத்துக்கு பதிலடி தர்ற மாதிரி பேசி, கலைஞரை ஒரு பிடி பிடிச்சாங்க. ஆனா அம்மா அரசியல் பேசினப்போ - கைத்தட்டி ரசிக்காம, ரொம்பச் சமர்த்தா நடந்துகிட்டாங்கப்பு நம்ம திரைப்படக் கலைஞர்கள்... வெரிகுட்... பொழைச்சுப்பீங்க!

கூட்டத்துல விருது வாங்கியவங்க குடும்பத்தாரைத் தவிர, ஏகப்பட்ட ரத்தத்தின் ரத்தங்களும் மகளிர் அணி சார்பா வந்து, அம்மாவுக்கு வாழ்த்து கானா... ஸாரி... வாழ்த்து கோஷம் போட்டு இம்சை பண்ணிக்கிட்டே இருந்தாங்க. விக்ரம், சினேகா, சூர்யா, ஜோதிகா எல்லாரையும் கியூவுல நிப்பாட்டி, பேரைச் சொல்லிக் கூப்பிட்டு விருது கொடுத்தாங்க... பிளாக்மெட்டல் ஃபிரேம் போட்ட கண்ணாடியை ஸ்டைலா போட்டுக்கிட்டு கியூவுல நின்ன சூர்யா, அம்மாகிட்டே போறப்போ மட்டும் கண்ணாடியை மடக்கி ஜோப்புல வச்சுக்கிட்டாரு. மேடைக்கு ஏறினவுடனே சினேகாவுக்கு 'அமைச்சர்' ஃபீலிங் வந்துருச்சு போல... தொபுக்கடீர்னு அம்மா கால்ல விழுந்துட்டாங்க! எப்படியோ அம்மாவோட சாதனைப்பட்டியல்ல 'கலைமாமணி'யும் வந்தாச்சு!



# எங்கே என் கண்ணன்?

'நான்...
'கல்கி'யாய் வருமுன்
கல்கிக்குள் வந்தவன்; தர்மம்
பல்கிப் பெருகவே
நல்கினேன் இத்தொடரை...!'

- ஸ்ரீகிருஷ்ணன்

அனுராதா, அந்தப் பெட்டி முன் அப்படியே கண்களை மூடிக்கொண்டு தியானம் புரிபவள் போல அமர்ந்தாள். சம்பத்தும் அவள் அருகே சென்று அமர்ந்தான். கணேஷுக்குதான் அடுத்து என்ன செய்வதென்றே தெரியவில்லை.

ஒருவேளை இந்த திருவிளையாடலை நான் உணர்ந்து பக்தி செலுத்த வேண்டும் என்பதுதான் கண்ணனின் எதிர்பார்ப்பா?

அனுராதா சட்டென்று விழித்தவள் கணேஷ் கையில் இருந்த செல்ஃபோனைப் பிடுங்கி, ஃபிளைட்டுக்கு டிக்கட் புக்செய்தாள். "நான் கிளம்பறேன்... மிஸ்டர் கணேஷ், நான் இப்ப உங்க வீட்டுக்குத்தான் போகப் போறேன்... அந்த கண்ணனோட லீலைகளை நேரில் பார்க்கிற வாய்ப்பை நான் இழக்க விரும்பலை. சம்பத் சார்... உங்க பயணத் திட்டம் என்னன்னு சொல்ல முடியுமா?" என்று கேட்டாள்.

"நான் இப்ப ஹரித்வார் போகணும் மேடம். இந்தப் பெட்டியை பத்திரமா அப்பாகிட்ட கொண்டு சேர்க்கணும்" என்று சம்பத்தும் அவளுடன் தொற்றிக் கொண்டான். கணேஷ் மட்டும் மௌனமாகவே



32

இருந்தான். அனுராதா புறப்படுகிறேன் என்று சொன்னது அவனை என்னவோ செய்தது.

"என்ன கணேஷ்... நான் இளம்ப ரேன்னு சொன்னதும் உங்களுக்கும் சென்னை வந்து உங்க வீட்ல நடக்கப் போற அதிசயங்களைப் பார்க்கணும்னு தோணுதா?"

அவள் கேள்வி அடுத்த நொடியே அவனுக்கும் சென்னை புறப்பட்டால் என்ன என்றுதான் சிந்திக்க வைத்தது.

"அ– ஆமாம். அவசியம் அந்த கண்ணனைப் பார்க்கணும். ஆள்மாறாட்டம்

## இந்திரா செளந்தர்ராஜன்

பண்ணியிருக்கற அந்த ஆள் அங்க என்ன பண்றார்ங்கறது ரொம்ப முக்கியம். உங்களைப் போல பாசிடிவா மட்டும் என்னால யோசிக்க முடியலை... அங்க நெகடிவா ஏதாவது..."

கணேஷை பதிலுக்கு அனுராதா ஒரு வெறித்த பார்வை பார்த்தாள். ஆனால் அவன் கருத்தை துளியும் மறுத்தோ எதிர்த்தோ பேசவில்லை. அதே சமயம் அந்த அறையின் வாசலில் ஆடிட்டர் அனுப்பித் தந்திருந்த அந்த நிஜமான(?) கண்ணன்.

"வாங்க மிஸ்டர் கண்ணன்" என்று அவரை வரவேற்ற கணேஷ், அவரை உட்காரச் சொல்லிவிட்டு அவர் எதிரிலேயே

தன் சூட்கேஸை எடுத்து துணிமணிகளை அடுக்கத் தொடங்கினான்.

"என்ன மிஸ்டர் கணேஷ்... எல்லாரும் கிளம்பிட்டு இருக்கற மாதிரி தெரியுது... எங்க?"

"சென்னைக்குத்தான்..."

"ஆமா, யாரோ என் பேர்ல ஒருத்தர் இங்க வந்து உங்ககூட இருந்ததா போன்ல பேசும்போது நான் யூகிச்சேன்... யார் அது... எவனாவது ஃப்ராட் இங்க வந்து கிடைச்சதை சுட்டுக்கிட்டுப் போய்ட்டானா?"- அந்தக் கேள்விக்கு அனுராதா இடையிட்டாள்,

"அப்படிச் சொல்லக் கூடாது. அவன் பொருளைச் சுடலை. எங்க மனசுக்குள்ள இருக்கற இருளைச் சுட்டுட்டதா தான் நான் நினைக்கறேன்...." என்று அவள் சொன்னதை அந்தக் கண்ணனும் வினோதமாகக் கருதி கேட்க அவர்கள் மூவரிடமும் ஒரு பரபரப்பான துரிதம்.

கணேஷின் அப்பா சுவாமிநாதனுடன் கண்ணன் உள்ளே நுழைய அவன் தாய் சகுந்தலா முகத்தில் ஒரே பரவசம்...

"என்ன பாக்கறே... நான் இப்ப பைத்தியக்காரன் இல்ல சகுந்தலா... இதோ இந்த புண்ணியவானால நான் பைத்தியம் தெளிஞ்சு மறு ஜென்மம் எடுத்து வந்துருக்கேன்" என்று சுவாமிநாதன் கண்ணனை நோக்கி கைகளைக் காட்டினார்.

கண்ணன் பார்வையோ கணேஷின் அந்த குச்சு வீட்டைத் துழாவியபடி இருந்தது.

"வாங்க... உள்ளவாங்க... உட்காருங்க. என்னால இப்பக் கூட நம்ப முடியலை. ஆனா ஒண்ணுமட்டும் நிச்சயம். நான் எழுதின ஸ்ரீராமஜெயம் வீண்போகலை."

அவள் அளவுக்கதிகமாகவே படபடத்தாள்.

"ஸ்ரீராமஜெயமா?"- கண்ணன்தான் கேட்டான்.

"ஆமாம்... ஒரு தடவை இல்ல... இரண்டு தடவை இல்ல... கோடிதடவை... ஒரு ஆச்சரியம் போல இன்னிக்கு காலையிலதான் கோடிங்கற கணக்கு பூர்த்தியாச்சு. என் பிரார்த்தனையும் பலிச்சுடுச்சு...." - அவள் பேச்சோடு உள்ளே சென்று கட்டு கட்டாக ஒரு குயர் நோட்டுகளை ஒரு மூட்டை போல தூக்கி வந்து கண்ணன் முன் காட்டினாள்.

"அந்த ஓம்ங்கற மந்திரத்துக்குள்ள இருந்து வந்திருக்கற ராம்ங்கற சொல்லோட

> "சார், நேத்து நகைக் கடையிலே கொள்ளையடிச்சவன் யாருன்னு கண்டுபிடிச்சுட்டேன்!"
> "சபாஷ்! உடனே போய் மாமூலை வாங்கிட்டு வந்துடு."
> - ஆர்.ஆர். பூபதி

வைப்ரேஷன்ல தான் இருக்கு வைத்தியம், சூட்சமம் எல்லாம். இங்க இப்படி நீங்க செய்த வைத்தியம் கூட இவரை நான் கண்டுபிடிக்கக் காரணம்... இவர் கங்கைல மூழ்கக் காரணம், கர்மக் கணக்கு தீரவும் காரணம்..."

கண்ணனின் விளக்கம் அவள் வரையில் புதிது. பரவசம் துளியும் குறையாதபடி கேட்டுக் கொண்டபோது எதற்கோ வெளியே சென்றிருந்த இளைய மகள் சுஜாதா உள்ளே நுழைந்து கொண்டிருந்தாள். அவளுக்கும் தெளிவான அப்பாவைப் பார்க்க பிரமிப்பு. அது அவள் கண்களில் வழிந்தது. அப்படியே மிகுதியான உணர்ச்சி வசப்பாட்டில் அடுத்த நொடியே வலிப்பு வந்து விட்டது.

கையும் காலும் வெட்டி வெட்டி இழுக்க, கீழே விழுந்துவிட்டவளை கண்ணன்தான் தாங்கிப் பிடித்தான். அப்படியே மடிமேல் போட்டுக் கொண்டவன், அவள் நெற்றிப் பொட்டை இறுக்கிப் பிடித்தான். அவளையே உற்றும் பார்த்தான்.

அவன் நெற்றிப் பொட்டை அழுந்த பிடித்த நொடியில் வலிப்பும் அடங்கத் தொடங்கி, மெல்ல கால் கைகள் சமனமாக அவளும் மெல்லச் சீராகி சற்று சோர்வோடு எழுந்து அமர்ந்தாள்.

எதிரே அவளது தாயும் தந்தையும் இறுகிப்போய் அவளையே வெறித்தபடி இருந்தனர்.

"அப்பா கண்ணா... என் பைத்தியம் குணமானதை விட பெரிசு, இவளுக்கு இந்த வியாதி குணமாகறதுதான். காசியில என்



பையன்கிட்ட சொல்லிட்டு வந்த மாதிரி, இவளுக்கு ஒரு விமோசனத்தை உன்னால தரமுடியுமா?"

சுவாமிநாதன், கலங்கிவிட்ட விழிகளோடு கண்ணனைப் பார்த்துக் கேட்டார்.

"எனக்கென்னவோ இனி இவளுக்கு இந்த மாதிரி வலிப்பே வராதுன்னு தான் நினைக்கறேன். அப்படியே வந்தா... வந்தா தான்... கண்ணானு ஒரு குரல் கொடுத்தா நான் வந்து திரும்பவும் ஒரு வர்மத்தட்டு தட்டிட்டுப் போறேன் இப்ப என்ன?"

கண்ணன் கண்களைச் சிமிட்டிக் கொண்டு கேட்ட விதம் அனைவரையும் வியப்பில் புதைத்தது.

"இன்னும் உங்க பெரிய பொண்ணோட விஷயம் பாக்கி இருக்குல்ல...?"- கண்ணன் சுவாமிநாதனிடம் முந்திக்கொண்டு கேட்டதில் அவரிடம் மேலும் திக்குமுக்காடல்...

"எனக்கென்னவோ... அது கூட சரியாயிட்ட மாதிரிதான் தெரியுது... ஆமா எங்க உங்க பெரிய பெண்...?"- கேட்டபடியே பார்வையைச் சுழல விட அதே நேரத்தில் அவளும் ஒரு அறைக் கதவைத் திறந்து கொண்டு வந்தாள்.

அவள் பார்வையில் அப்படி ஒரு சோகம்.

"சரண்யா..." என்று சுவாமிநாதன் கட்டிக் கொண்டபோது, கண்ணன் பார்வை எதனாலோ தொலைபேசி மீது சென்றது. அவன் பார்த்த மறுநொடி அதனிடம் சப்தம்!

சரண்யாவே அதை கையில் எடுத்தாள். மறுமுனையில் அவளது நாத்தனார் இந்துமதி பேசினாள்.

"அண்ணி, நான் இந்து பேசறேன்..." என்று ஆரம்பித்தவள் அடுத்து என்ன சொன்னாள் என்று தெரியவில்லை. சரண்யாவின் முகத்தில் ஏகத்துக்கும் மாறுதல். ஒரு கட்டத்தில் தொலைபேசி அவள் கை நழுவிக் கீழே விழுந்தது. அவளும் மயங்கி விழுந்தாள்.

**ஹ**ரித்வார்!

பெட்டியும் கையுமாக நின்ற சம்பத்தையே கண்ணனாகக் கருதி காலில் விழுந்து விட்டார் ஸ்ரீனிவாஸன்.

"அப்பாாா..."- அவன் பதறிப்போய் விலகினான்.

"சம்பா... பெருமாள் நம்மை கைவிடலைடா... எதுக்காக யாத்திரை வந்தோமோ அது பூர்த்தியாயிடுத்து. நீ அப்பாவாகப் போறே... நான் தாத்தாவாகப் போறேன்"- என்று அவர் கூறவும் சம்பத்துக்கு கிறுகிறுவென்று எல்லாமே சுழல்கிற மாதிரி இருந்தது.

சம்பத் அடுத்த நொடி சாருவைத் தேடிக் கொண்டு ஓடினான். அவளும் டாக்டரின் அறையில் தென்பட்டாள். மூச்சிரைக்க அவள் எதிரில் போய் நின்றான்.

"சாரு... கண்ணன் நம்மை கை விடலை சாரு. அவன் இங்கேயும் வந்துட்டான்... ஆனா உன் வயித்துக்குள்ள...." என்றபடியே உணர்ச்சி மிகுதியோடு சாருவைக் கட்டிக் கொண்டான்.

டாக்டரையே அந்தக் காட்சி உலுக்கி விட்டது!

**க**ணேஷ்-ம் அனுராதாவும் கணேஷின் வீட்டுக்குள் நுழைந்தபோது, சரண்யா பெரிய மூட்டை முடிச்சுகளுடன் புறப்பட்டுக்கொண்டிருந்தாள்.

"பார்த்தும்மா... கவனமா அவரைப் பார்த்துக்கோ, எதுன்னாலும் ஃபோன் பண்ணு... நாங்களும் யாராவது ஒருத்தர் உன்கூட ஆஸ்பத்திரியில துணைக்கு இருப்போம்..." என்று சகுந்தலா சொல்வதில் இருந்து அவளது புறப்பாடு ஒரு ஆஸ்பத்திரிக்கு என்று விளங்கியது.

"அம்மா... அப்பா..."

"வாப்பா... சரியான சமயத்துக்குத்தான் வந்துருக்கே... நல்லவேளை..."

"என்னம்மா... அக்கா எங்க போறா...?"

"அதை ஏண்டா கேக்கறே... நம்ம மாப்ளை குடிச்சுட்டு பைக் ஓட்டினதுல ஆக்ஸிடெண்ட் ஆயிடுச்சு. ஆள் பிழைக்கறதே பெரும்பாடுன்னு சொல்லிட்டாங்க. பிழைச்சாலும் காலை எடுக்க வேண்டி

வரும்னு சொல்லவும் மாப்ள குடும்பத்துல அப்படியே அவரைப் போட்டுட்டாங்க.

இருந்தாலும் கெட்டதுல ஒரு நல்லது மாதிரி அவருக்கு அப்பதான் பொண்டாட்டி அருமை தெரிய வந்துருக்கு. 'சரண்யா... சரண்யா'ன்னு ஒரே புலம்பல். மாப்ளை தங்கை இந்து மூலமா தகவல் வரவும் ஓடினோம். நீ அனுப்பி வெச்சியே கண்ணன் அவரும் கூட வந்து உதவி செய்தார். உதவின்னா சாதாரண உதவி இல்லை. ரத்தமும் கொடுத்துக் காப்பாத்தியிருக்காரு. நிஜமா சொல்றேன்... அந்த கண்ணன் வேற கடவுள் வேற இல்ல!"

சகுந்தலாவின் விளக்கம் அனுராதாவைக் கிள்ளியது.

"அம்மா அவர் கடவுளேதான்... ஆமா, இப்ப எங்க அவர்?"

"ஆஸ்பத்திரியில தான் இருக்கார். அவரைப் பாத்துக்கச் சொல்லிட்டுதான் சரண்யா வந்துருக்கா... அங்கேயே தங்க வேண்டி இருக்கறதால புடைவை துணியெல்லாம் எடுத்துக்கணும் இல்லையா? ஆமா நீ யாரும்மா...?"

"வந்து சொல்றேன்... கணேஷ் கமான் க்விக்.... நாம இப்ப ஆஸ்பத்திரிக்குப் போறோம்... என்ன சொல்றீங்க."

கணேஷும் அனுராதாவும் வந்த வேகத்தில் திரும்பினார்கள் இல்லையில்லை... ஓடினார்கள்!

ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தபோது அந்த கண்ணன் இல்லை! கணேஷுக்குத் துளியும் பிடிக்காத மாப்பிள்ளை கண்ணீர் மல்க கை கூப்பியபடியே அவனைப் பார்த்தார். அந்தப் பார்வையில் அவர் கேட்கும் ஆயிரம் கோடி மன்னிப்புகள் ஒளிந்திருப்பதை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது.

எதிர்ப்பட்டார் டாக்டர்!

"காலை எடுக்காமலே ஆபரேஷன் செய்து காப்பாத்த முடியும்னு தோணுது. கண்ணன்கறவர் கொடுத்துருக்கற ரத்தம் எங்க வரைல ரத்தமா தெரியல... அது ஒருவித டானிக்..." என்றார் அப்படியே...

"இப்ப அவர் எங்க டாக்டர்...?"

"நீங்கதான் கணேஷா?"

"ஆமாம்..."

"ஓ... நீங்க வந்தா உங்ககிட்ட சில விஷயங்கள் சொல்லச் சொன்னார். அவரோட கடமை முடிஞ்சுடுச்சாம். அதனால அவர் போறேன்னார்..!

ஆனாலும் உண்மையான மனிதர்களுக்கு முடிஞ்ச உதவி செய்யறதுல தனக்கு ஒரு திருப்தி இருக்கறதா சொல்லச் சொன்னார். உதவி செய்யறதுக்காக ஆள் மாறாட்டம் செய்தது தப்புதான்னும் சொல்லச் சொன்னார். கிருஷ்ண தந்திரம்னா அப்படித்தான்னார்!"

டாக்டர் கொஞ்சம் இடைவெளிவிட, கணேஷ் இலேசாகத் திக்குமுக்காடினான். அனுராதாவுக்கு பெரிய ஏமாற்றமாக இருந்தது.

"பைதபை.. மிஸ்டர் கணேஷ்... நான் தெரியாமத்தான் கேக்கறேன்... உங்களுக்கும் அவருக்கும் இடையில் அப்படி என்னதான் கான்ட்ரவர்ஸி. எனக்கு எதுவுமே புரியல. உண்மைல அவர் யார்?"

முத்தாய்ப்பாக டாக்டர் கேட்ட கேள்வி அனுராதாவைக் கண்கலங்க வைத்து விட்டது.

கணேஷ் முதல் தடவையாக அண்ணாந்து ஜன்னல் வழியே வெளியே தெரிந்த வானத்தைப் பார்த்தான். இருந்தும் இல்லாத அதுவும் கண்ணனும் ஒன்றுபோல உணர்ந்தவன் அப்படியே நின்று விட்டான்.

(முற்றும்)

தமிழ் சினிமா வரலாற்றின் முதல் பின்னணிப் பாடகி பி.ஏ. பெரியநாயகி. 'ஸ்ரீவள்ளி' படத்தில் கதாநாயகி ருக்மணியின் (நடிகை லட்சுமியின் தாயார்) குரலுக்குப் பதிலாக, பெரியநாயகியின் குரலே ஒலித்தது.

- பழைய சினிமா பத்திரிகை

கு.ஞானசம்பந்தன்



9

# சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

# காணாமல் போன உயிர் நண்பர்கள்!




சமீபத்தில் வெளிவந்துள்ள 'இதயத்திருடன்' படத்தில் எனக்கு நடிக்க வாய்ப்புத் தந்த இயக்குநர் சரண் அந்தப் படத்தின் கதையை எனக்குச் சொல்லும்போது, ஒரு மகிழ்ச்சிகரமான குடும்பத்தின் தலைவனாக நடிக்க வேண்டும் என்றார், எனக்கு சினிமா மணியின் குடும்பம்தான் ஞாபகத்துக்கு வந்தது.

அதிலும் படத்தில் ஒரு காட்சியில் கதாநாயகன் ஜெயம் ரவி, தன் காதலியைப் பார்க்கச் செல்லும் காட்சியில் நானும் என்னுடன் நடித்த கல்பனா, குழந்தையாக நடித்த அம்ருதா மூவரும் வாசலுக்கு வந்து வாழ்த்தி மகிழ்ச்சியாகக் கையாட்டி அனுப்பி வைப்போம்.

அப்போது பக்கத்து வீட்டுக்காரப் பெரியவர் என்னிடம் வந்து 'என்ன மிஸ்டர் தியாகராஜன், உங்க பையன் முதன்முதலா வேலைக்குப் போறானா?' என்று கேட்பார்.

அதற்கு நான், 'இல்ல, முதன் முதலாகக் காதலிக்கப் போறான்' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறுவேன். இந்தக் காட்சியை சென்னை அண்ணா நகரில் எடுக்கும்போதும் சரி, தியேட்டரில் இந்தக் காட்சி ஓடும்போதும் பெரும் வரவேற்பாக இருந்தது.

சினிமா மணி 'முதலாளி' படத்தில் வருகின்ற 'ஏரிக்கரையின் மேலே' பாடலைப் பாடி 'என்ன ராகம்?' என்று கேட்டபோது எங்கள் அனைவருக்கும் திகைப்பாக இருந்தது.

கணக்கு வாத்தியார் பூவராக சாமியைத் தெரியும். தவிர உள்ளூரில் யானைகளுக்குப் போட்டியாகத் தெருவையே மிரட்டிக் கொண்டிருக்கும்

உள்ளூர் வராகங்களைத் தவிர வேறு ராகங்களை அறியாத எங்களுக்கு மத்தியில் சினிமா மணி ஒரு தேவ தூதனாக உலாவந்தான்.

இப்படி நாங்கள் பேசிக்கொண்டே சைக்கிளில் ஒரு சிறிய ஊருக்குள் நுழைந்தோம். அப்போது அபசுரமாக பெரிய சத்தம் ஒன்று கேட்டது. முன்னால் போன பால்கார சிவ னாண்டி, நட்ட நடுரோட்டில் தன் குடும்பத்துடன் நிம்மதியாகத் துயில் (தூங்கிக்) கொண்டிருந்த நாய் மீது இருட்டில் தன் சைக்கிளை ஏற்றி விட, அவை கூட்டுக்குடும்பமாக ஆக்ரோஷமாகக் கிளம்பி எட்டுத்திக்கும் பதினாறு கோண முமாக எங்கள் எல் லோரையும் துரத்த ஆரம்பித்தன... அப் போது...

**ஊ**ரில் இருந்த அத்தனை நாய்களும் ஒன்றாகச் சேர்ந்து சிவனாண்டியைச் சுற்றிக் குரைக்கத் தொடங்க, திடீ ரென்று அவன் உரத்த குரலில், 'ஜால காகினி, மாயமோ கினி, ஓம் ஷட்!' என்று நாய்களைக் காட் டிலும் அதிக சத்தத் துடன் ஒரு கத்துக் கத்தினான். அவன் கத்திய கத்தலுக்குப் பயந்தோ அல்லது அதில் இருந்த மந்திரத்தை அறிந்தோ அந்த நாய்கள் ஒருநிமிடம் மலங்க மலங்க விழித்த படி அமைதியாகப் படுத்துக்கொண் டன.

எங்களுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. ஊரைவிட்டு வெளியே வந்தபிறகு நாங்கள் அவனிடம் "அது என்ன மந்திரம்டா, ஒரே சத்தத்திலே ஊர் நாயைப் பூரா அடக்கிட்டியே?" என்று கேட்டோம்.

"அது ஒண்ணுமில்லடா. 'பாட்டி சொன்ன கதை' படத்திலே அந்த மந்திரவாதி சொல்லுவான்ல. அதைத் தான் மனப்பாடம் பண்ணி வச்சிருந் தேன். ஏதாவது ஆபத்துன்னா ஒரு சத்தம் போடுவேன். அதோடு எல்லாம் குளோஸ்" என்று மந்திர ரகசியத்தைப் போட்டுடைத்தான்.

எங்கள் சினிமா குழு விரும்பிப் பார்க்கும் சண்டைப் படங்களில் தெலுங்குப் படங்கள்தான் அதி கம். அதிலும் என்.டி. ராமராவ், காந்தாராவ் போன்ற கதாநாயகர்கள் படமென்றால் விடவே மாட்டோம். 'மாய மோதிரம்', 'வீரசபதம்', 'விடாக்கண்டன் கொடாக்கண் டன்' இந்தப் படங்களின் பெயர் களே கவர்ச்சிகர மாக இருக்கும். இந்த மாதிரிப் படங்களை எடுத்து ஆந்திரா மற் றும் தமிழ்நாட்டு ரசிகர்களின் உள்ளங் களைக் கொள்ளை கொண்டவர் விட்ட லாச்சாரியா. 'விட்ட லாச்சாரியாவின் ஜெகன் மோகினி' என்றே வால்போஸ் டரில் அச்சிடுவார் கள்.



• நாகக்கன்னி....

பறக்கும் கம்பளங் கள், பேசும் பாறை கள், மந்திரக் குகை கள், மூன்று தலை மனிதர்கள் என அந்த உலகமே நமக்கு புதிய சந்தோ ஷத்தைக் கொடுக் கும். தற்காலத்தில் 'ஜுராசிக்பார்க்'கில் வரும் டைனோசர்களைப் பார்த்து ஆச்சரியப் படுகிறோம். 'மாயமன்னன்' படத்தில் கடலுக்குள் இருந்து எழுந்து வரும் புதுவகையான மிருகத்தை கிராபிக்ஸ் இல்லாத காலத்தில் உரு வாக்கிக் காட்டியவர் விட்டலாச் சார்யா.

**நா**ங்கள் எங்கள் ஊருக்குள் நுழைந்து, அவரவர் தெருவுக்குள் பிரிந்து, வீடுகளை நோக்கிச் செல்லத்

தொடங்கினோம். நான் தெருமுக்கிலிருந்து எங்கள் வீட்டில் அந்த நேரத்தில் லைட் எரிந்து கொண்டிருந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனேன். சகுனம் சரியில்லை. எங்கள் வீட்டில் லைட்டைப் பார்த்ததும் என்னோடு வந்த 'உயிர்' நண்பர்கள் ஒரு வினாடியில் காணாமல் போனார்கள்.

நான் தயங்கித் தயங்கி வீட்டுக்குள் நுழைந்தேன். கோபமே உருவமாக என் தந்தையார் சிங்கம்போல குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தார். வீட்டில் வேறு உயிரினங்கள் இருப்பதற்கான அறிகுறிகளே இல்லை. ஆபத்பாந்தவி, அநாதரக்ஷகி என் அம்மாவைக் கூடக் காணவில்லை. இந்தச் சூழலை நான் முன்னமே எதிர்பார்க்காததால் ஒரு பொய்யைக் கூடத் தயார் செய்யாமல்வேறு உள்ளே நுழைந்து விட்டேன். இப்படிப்பட்ட நேரங்களில் சினிமா கதாநாயகர்கள் என்ன செய்வார்கள் என்றும் உடனடியாக நினைவுக்கு வந்து தொலையவில்லை. தெலுங்குப் படங்களாக இருந்தால் ஒரு பாட்டையாவது பாடிச் சமாளித்து விடலாம். என்ன செய்வது...



''நகர்வலம் போறப்ப மன்னர் மாறுவேடம் போடுறதை நிறுத்திட்டாராமே- ஏன்?''

''மாறுவேடம் போட்டு விடுறவனுக்கு நாலு மாச சம்பளப் பாக்கி!

- அம்பை தேவா

என்னைப் பார்த்ததும், பிரகலாதன் அருகில் வரும் ஹிரண்யகசிபு மாதிரி என் அப்பா என்னை நோக்கி வந்தார்.

''அதாவது வந்து, நம்ம சிவானாண்டி அப்பாவுக்கு உடம்பு முடியல. படுத்த படுக்கையாக் கிடக்கிறாரு அவருக்கு மருந்து வாங்க...'' என்று நான் இழுத்து இழுத்து சாவி குடுக்காத கிராமபோன் பெட்டி மாதிரிப் பேசத் தொடங்கினேன்.

''தெரியும்'' - என்றார் அப்பா அமைதியாக.

''எப்படி?'' - என்றேன் நான் அப்பாவியாக

''அவரே நேரே வந்து சொல்லிட்டு இப்பத்தான் போயி திரும்ப படுத்த படுக்கையா ஆயிட்டாரு'' என்று சொன்ன என் அப்பா, ''உண்மையைச் சொல், எங்க் போயிட்டு வர்றே? செகண்ட்ஷோ சினிமாவுக்குத்தானே'' என்று அதட்ட...

பிறகு நடந்ததை நான் சொல்ல வேண்டியதில்லை. நீங்களே யோசித்திருப்பீர்கள். அதுதான் நடந்தது. விடியற்காலம் ஐந்து மணி வரைக்கும், அறிவுரையும், எதிர்காலத் திட்டங்களுமாக என்னைப் பற்றிய அவரது கனவுகளையும் அரட்டலாக, அதட்டலாக, மிரட்டலாக ஏதோ ஒரு ஆக என்று விடாமல் சொல்லிக்கொண்டிருந்தார்.

நீங்கள் நினைப்பீர்கள், உடனே நான் அன்றிலிருந்து, சினிமாவுக்கே போயிருக்க மாட்டேன் என்று. அது தான் இல்லை. இது நடந்த மறு நாளைக்கு மறுநாள் எங்கள் கூட்டம் ஆத்தங்கரைத் தோப்புக்குள் ரகசியமாக நடைபெற்றது.

சிவனாண்டியை, எருமைக்கன்னுக் குட்டி கட்டும் தொழுவத்தில் கட்டி வைத்து, அவன் அப்பா விடியும்வரை அடித்ததாக அவன் சொல்ல.... சிவத்தக் காளை நிலைமையோ அதைக் காட்டிலும் மோசம்.

(தொடரும்)



• படங்கள் : ஸ்ரீஹரி








1. வாழ்த்தும் வளைக்கரங்கள்!
2. சாவி இங்கே... வீடு அங்கே!
3. ஒவ்வொரு பூக்களுமே...
4. இந்தக் கூட்டம் போதுமா?... இன்னும் கொஞ்சம் வேணுமா?
5. ஆண்களுக்கும் போட்டி (எமது முகவர்கள்)!
6. 'சுப'மான விருந்து!
7. அள்ளுங்க பரிசை!
8. "எங்கே போகும் இந்தப் பாதை?..." "விழாவுக்குத்தான்!"

# மங்கையர் மலர்






## வெள்ளைக் காக்கா!

"மேல பாரு வெள்ளைக் காக்கா பறக்குது" எனச்சொல்லி விளையாட்டாக ஏமாற்றுவார்கள். அதேபோல மெயில் வானில் கடந்த பிப்ரவரியில் நிறைய வெள்ளைக் காக்கைகள் பறந்தன. 'ஒலிம்பிக் டார்ச்' எனத் தலைப்பிடப்பட்டு மெயில் வரும். ஓப்பன் செய்தால் 'இன்விடேசன்' என்றொரு ஃபைல் இருக்கும். அது உங்க ஹார்ட் டிஸ்க்கை மொத்தமாகக் காலி பண்ணிவிடும் வலிமை கொண்டது. எச்சரிக்கை 'இந்த மெயில்தான் பிப்ரவரியில் அதிகமாகப் பறந்த வெள்ளைக் காக்கா!' 'இந்த மெயில் சுத்த அக்மார்க் பொய்!' என பல ஆன்டி - வைரஸ் கம்பெனிகளின் நிபுணர்கள் மொத்தமாகக் குரல் கொடுத்துள்ளனர். இன்னொரு சுவாரசியமான மெயில் - 'அட உண்மைதாங்க! இந்த மெயிலை நீங்க பார்வர்டு பண்ணப்பண்ண உங்க மேல பில்கேட்ஸ் டாலர் மழையைப் பொழிவாரு. எனக்கு 999$ கிடைச்சிருக்கு!' - என பில்கேட்ஸ் பெயரில் 2003-ல் பறக்க ஆரம்பித்த ஒரு வெள்ளைக் காக்கா இன்னமும் பறந்து கொண்டே இருக்கிறது. போலி மெயில்கள் ஜாக்கிரதை!

# 'அல்லா'வுக்குத் தடை!




## 'அல்லா'வுக்குத் தடை!

யாஹூவில் இனி 'allah' என்ற வார்த்தை வரும்படி இனி யாரும் மெயில் ஐடி உருவாக்க முடியாது. யாஹூ அதற்குத் தடை விதித்துள்ளது. காரணம், 'allah'என்ற வார்த்தையை வைத்து பலர் மெயில் ஐடி உருவாக்குகிறார்கள். அப்படி உருவாக்கப்படும் ஐடிகளிலிருந்து தேவையில்லாத மெயில்கள், மிரட்டல் மெயில்கள் என யாஹூவின் விதிகளை மீறும் மெயில்கள் அனுப்பப்படுகின்றனவாம். எனவேதான் இந்தத் 'தடா'!

## லைவ் ஃபேஷன்!

எந்தவொரு பெரிய நிகழ்ச்சியையும் இணையத்தில் 'லைவ்'வாகப்

பார்ப்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வருகிறது. அதனால் இணையத்தில் நிகழ்ச்சிகளை ஒளிரப்பும் உரிமையைப் பெறவும் போட்டி அதிகரித்திருக்கிறது. சிஃபி (Sify) நிறுவனம், மார்ச் 28 முதல் ஏப்ரல் 1 வரை மும்பையில் நடைபெறவுள்ள 'லக்மே



பேஷன் வீக் 2006'ஐ தனது பிராட்பேண்ட் சேவையான 'சிஃபிமேக்ஸ்' மூலம் நேரடியாக ஒளிபரப்பும் உரிமையைப் பெற்றுள்ளது. நெட்டில் லைவ் கேட்வாக்.

## FUN டேட்டா:

'பிரம்மா + விஷ்ணு + சிவன்' சேர்ந்து படைச்சது உலகம் - இது ஹிந்துத்வம்!

'Alt +. Ctrl + Del' -ஆல் (Alt ஆக்கும் பிரம்மா, Ctrlகாக்கும் விஷ்ணு, Delஅழிக்கும் சிவன்) படைக்கப்பட்டது கணினி உலகம். இது ஐடித்துவம்!

- முகில்



### வளர்ப்பு...

பாடுபட்டு வளர்த்த
தென்னையின்
ஒவ்வொரு மட்டை
பட்டு விழும்போதும்
வளர்ந்து கொண்டே போகிறது
என் குடிசை நிழல்...



### மறத்தல்

யாரோ எழுதிய கவிதைதான்
படிக்கப் படிக்க அதில்
நீயும் நானும் அதுவும்
பளிச்சென
கண்ணாடிப் பிம்பமாய்த் தெரிவதில்
மறந்தே போனோம்
அந்த 'யாரோ'வை...

- வசந்த பாரதி

"கல்லூரியில் பயின்ற காலகட்டம். அண்ணா பல்கலைக்கழகத்தில் ஒரு பேச்சுப் போட்டி நடந்தது. பங்கேற்பாளர்கள் பேசவேண்டிய தலைப்புகளை, சீட்டு எழுதி, குலுக்கிப் போட்டார்கள். யாருக்கு என்ன தலைப்பு வருகிறதோ அதைப் பற்றித் தயக்கமில்லாமல் மூன்று நிமிடம் பேசியாக வேண்டும். என் முறை வந்த போது துண்டுச் சீட்டை எடுத்துப் பிரித்தேன். 'நான் ஒரு பைத்தியம்' என்று தலைப்பு வந்திருந்தது. அடுத்தகணம், 'நான் ஒரு பைத்தியம் தந்தை பெரியாரின் சிந்தனைகளுக்கு...' என்று தொடங்கி மூன்று நிமிடங்கள் பேசி முடித்தேன். அரங்கம் கரவொலியால் அதிர்ந்தது. அடுத்த மூன்று நிமிடங்கள் அதே தலைப்பை மறுத்துப் பேசவேண்டும் என்றார்கள். பரிசுக்காக எனது சிந்தனையை மறுத்துப் பேச முடியாது என்று அங்கிருந்து கோபமாக வெளியேறினேன்.

# "நான் சமூகத்தின் பிள்ளை!"

பெரியார் தமது சிந்தனைகளை முன் வைக்கும்போது கடைசியாக ஒன்றைச் சொல்வார். 'இதையெல்லாம் நான் சொன்னேன் என்பதற்காக ஒப்புக்கொள்ளாதே. நீயாக யோசி, உனக்குச் சரியென்று பட்டால் எடுத்துக்கொள், இல்லையென்றால் தூக்கிப் போட்டுவிட்டுப் போய்விடு.' இப்படிச் சொன்ன ஒரே சிந்தனையாளர் பெரியார் மட்டும்தான். இத்தகைய சிறப்புக் கொண்டவரை எப்படி மறுத்துப் பேச முடியும்?" என்று கேட்கும் வளவன் - நாடறிந்த தமிழறிஞர், பேராசிரியர் - பெரியார்தாசனின் மூத்த மகன்.

எச்ஐவி தொற்றுடன் பிறந்த ஒரே காரணத்துக்காக, குடும்பம், சமூகம் இரண்டாலும் புறக்கணிப்புக்கு ஆளாகும் குழந்தைகளின் பாதுகாப்புக்காகத் தொடங்கப்பட்ட சேவை அமைப்பு 'செஸ்'. டாக்டர் மனோரமா தலைமையில் அரிய செயலாற்றும் இந்த அமைப்பில் பணிபுரிந்து வரும் முப்பத்தைந்து வயது இளைஞர் வளவன்.

"பால்யம் முடிந்து எனக்கு நினைவு தெரிய ஆரம்பித்த காலகட்டத்தில் எனக்கு ஒரு உறவினராகத்தான் அப்பா தெரிந்தார். மாதத்தில் இருபத்தெட்டு நாட்களை வெளியூர் நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதிலேயே செலவிடுவார். எஞ்சிய இரண்டு நாட்கள் அவர் எங்களோடு செலவிடும் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம்... எங்கேயாவது வெளியே அழைத்துக்கொண்டு போக மாட்டாரா என்று மனம் ஏங்கும். அப்படியே அவர் அழைத்துக்கொண்டு போனாலும் அது அவருடைய கூட்டத்துக்காகத்தான் இருக்கும். தவறி அவர் வீட்டில் இருக்கும்போது, இங்கேதானே இருந்தார் எங்கே ஆளைக் காணோம் என்று தேடினால் புத்தகக் குவியல்களுக்கு மத்தியில் அவரது தலையைக் கண்டுபிடிக்கலாம். உடனே அழைத்து அருகே உட்கார வைத்துக்கொண்டு, தாம் அப்போது படித்து வரும் புத்தகம் பற்றி ஒரு முன்னுரை தருவார். ஆனாலும் பதினைந்து வயது வரை அப்பாவின் தாக்கம் என்பது என்னிடம் இல்லை.

பதினைந்து வயதை எட்டிய போது எனக்குள் ஒரு ரசாயன மாற்றம். பத்துப் பேர் இருக்கிற இடத்தில் நான் மட்டும் தனியாகத் தெரியவேண்டும் என்று விரும்பினேன். எனது துடிப்பைப் புரிந்து கொண்டவர் போல உயர்நிலைப் பள்ளியில் எனது தமிழாசிரியை கஸ்தூரி மனோகரன் என்னை மெள்ள மெள்ள மெருகேற்றினார். படிப்பில் அவரிடம் மட்டும் பெயர் வாங்கினேன். பேச்சுப் போட்டி என்றால் அவருடைய பணத்

தைச் செலவழித்து என்னைக் கூட்டிப் போவார். ஆனால் என்னை விடத் திறமையான மாணவர்கள் அங்கே பேசுவார்கள். வருத்தத்தோடு வீட்டுக்கு வருவேன். 'உன் திறமையை அடையாளம் கண்டுகொள்கிற நடுவர்கள் அங்கே இல்லை என்று நினைத்துக் கொள்' என்று உற்சாகமூட்டுவார் அம்மா. அப்படியும் தொடர்ந்து நான்காண்டுகள் தோல்விகள்தான் எனக்குத் தோழர்கள். கடைசியாக ஒருமுறை ஆறுதல் பரிசு கிடைத்தது. அப்போதுதான் தோன்றியது, நாம் ஆசிரியர் எழுதிக் கொடுத்து, அவருடைய இரவல் சிந்தனையில் அல்லவா பேசிக் கொண்டிருக்கிறோம். நமது சிந்தனையைப் பேசினால் நிச்சயம் பரிசு கிடைக்கும். ஆனால் நிறைய படிக்க வேண்டும். நம்மை தகுதிப் படுத்திக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்து உடனே படிக்க ஆரம்பித்தேன்.



**–வளவன் பெரியார்தாசன்**

நூலகங்களைத் தேடிப் போக வேண்டிய அவசியம் எனக்கு இல்லாமல் போய் விட்டது. கம்யூனிஸம் முதல் காமசூத்ரா வரை எல்லாத் தலைப்புகளிலும் கிட்டத்தட்ட ஒரு லட்சம் புத்தகங்களை அப்பா சேர்த்து வைத்திருந்தார்.

படிக்கப் படிக்க பேச்சு மெருகேறியது. யாருடைய உதவியும் இல்லாமல் தமிழகம் முழுவதும் போட்டிகளுக்குப் போக ஆரம்பித்தேன். மொத்தம் நூற்று எழுபது முதல் பரிசுகள். என் மீது வெளிச்சம் விழ ஆரம்பித்தது. இரவு பகலாக உழைத்து, கண்ணாடி முன்னால் நின்று பேசி பரிசு வாங்கினால், பாராட்டுகிற நேரத்தில், 'இவர் பெரியார் தாசனுடைய வாரிசு... மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேண்டுமா?' என்று சுலபமாகச் சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள். நான் உடைந்து விடுவேன். இது என்னுடைய முயற்சி. நான் நானாகவே அறியப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். என் முயற்சிக்கும் உழைப்புக்கும் இந்தச் சமூகத்தில் அங்கீகாரம் கிடைக்கட்டும்'' என்று சொல்லும் வளவனின் மேடைத் தமிழில் அவரது தந்தையாரின் சாயல் சிறிதுமில்லாமல் இருப்பதைப் பார்த்து வலம்புரிஜான், சுகி-சிவம் போன்றவர்கள் பாராட்டியிருக்கிறார்கள்.

கல்லூரிப் படிப்பை முடித்ததும் லட்சக்கணக்கில் செலவு செய்து ஐஐடியில் கணிப்பொறி படிக்க வைத்தார்கள். நான் ஒரு கணிப்பொறி வல்லுனராக வேண்டும் என்று நினைத்தார்களோ என்னவோ... அதை, என் தம்பி நிறைவேற்றினார். ஆனால் என்னிடம் ஒரு தீர்மானம் இருந்தது. என்னை உருவாக்கிய இந்த நாட்டு மக்களுக்கு எனது வரிப்பணம் பயன்பட வேண்டும்; பெற்றோர், உறவுகளோடு இங்கேயே இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தேன். மேல்நிலைப் பள்ளியில் படிக்கிற காலம் தொட்டு 'செஸ்' அமைப்பில் என்னை இணைத்துக் கொண்டேன். அவர்களது வீதி நாடகங்கள், தெருமுனைப் பிரசாரம் இவற்றில் எனது பேச்சைப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

பிரசாரத்தின்போது அடித்தட்டு ஏழை எளிய மக்களின் பேச்சு மொழியில் பேசியதால் பெரிய வரவேற்பு கிடைத்தது. பின்னால் கல்லூரி முடித்து வேலை என்று வந்தபோது மனிதர்களோடு பழகுகிற மாதிரி ஒரு வேலைதான் தேவை என்று முடிவெடுத்து செஸ் அமைப்பில் ஆலோசகராகச் சேர்ந்து இன்று திட்ட மேலாளராக உயர்ந்திருக்கிறேன்'' என்று பேசுகிற வளவன், தாலி மறுப்புக் கொள்கையைத் தீவிரமாகக் கடைப் பிடித்து திருமணம் செய்திருக்கிறார்.

''அப்பா என்கிற வேரை விட்டு விட்டு நான் எங்கேயும் படர முடியாது. ஆனால் அவரைவிட ஒரு படியாவது மேலே போய் சமூகத்தின் பிள்ளையாக அடையாளம் பெற வேண்டும்'' என்பதில் தீவிரம் காட்டும் வளவன் ஒரு பக்கம் சமூக சேவை மறுபக்கம் மேடைப் பேச்சு என வெற்றிகரமாக வலம் வருகிறார்.

தொகுப்பு : **ஆர்.சி. ஜெயந்தன்**
படம் : **ஸ்ரீஹரி**

''என் காதலருக்கு பொசசிவ்னெஸ் ஜாஸ்தி!''
''அப்படியா?''
''அவர் தேர்வு செய்யற வரனைத்தான் நான் கட்டிக்கணுமாம்!''
- அம்பை தேவா

# "ஞாபகமா இருக்கட்டும்!"

- எஸ்.ஜே.கலைவாணி



''நர்ஸ், டாக்டரோட பொண்டாட்டியாம்!''

''ஊசியைக் கொடுத்துட்டுப் போய்யா..''
''விடுங்க டாக்டர்... நர்ஸ் ஞாபகமா இருக்கட்டும்!''
- எஸ்.ஜே.

''ஏன் உள்ளே வந்துட்டு பாக்காமப் போறீங்க?''
''உடம்பைக் குறைக்க மருந்து வாங்கலாம்னு வந்தேன்... இருக்கற மாதிரி தெரியலை...''





''பக்கத்து வீட்டுக்காரி பட்டுப் புடைவையைப் பார்த்தா விடுவீங்களே... அந்தமாதிரி பெருமூச்சு விடுங்க...!''

* தித்தித்த தமிழ்!

# 'பொய்' கலக்காத நன்றி!



* மென்காற்று!

முத்தமிழ்ப் பேரவைக்காகத் தித்திக்கும் தமிழ்ப் பாடல்களுடன் ஒரு நிகழ்ச்சி வழங்கினார் பாடகர் மணிமாறன் (அழகான தமிழ்ப் பெயர்!). ஆழமான, ஆண்மை ததும்பும் குரல் மணிமாறனின் மிகப் பெரிய பலம். அதன் வீச்சையும், கவர்ச்சியையும் அவர் நல்ல முறையில் வெளிப்படுத்தி ரசிகர்களைத் திருப்தி செய்தார். 'நின் அருள் இயம்பலாகுமா?' என்ற பாபநாசம் சிவனின் பாடலும், கீரவாணியில் 'தேவி நீயே துணை' என்ற பெரியசாமி தூரனின் கிருதியும் முக்கிய இடம் வகித்தன. இந்த இரு ராகங்களிலும் மாறனின் பிரயோகங்களும், கார்வைகளும் பிருகாக்களும் அவர் சங்கீத சங்கதிகளை நன்கு உணர்ந்தவர் என்பதை உணர்த்தின. வயலின் வாசித்த நாகை ஸ்ரீராம் என்ற இளைஞரின் விரல்கள் பல நகாசு சங்கதிகளை, மணிமாறனின் கற்பனைக்கு இணையாக (சில இடங்களில் மேலாகவே) ராக ஆலாபனைகளிலும், ஸ்வரங்களிலும் காட்டியது கச்சேரிக்கு மெருகேற்றியது. குறை! ஆரபியும், சுத்த சாவேரியும் ஒரே நிகழ்ச்சியில் தேவைதானா மணிமாறன்?

* புதுமை தேடும் வேட்கை!

75 வயது பாலசந்தரின் 25 வயது இதயத்தை வெளிக்கொண்டு வருகின்றன 'பொய்' படத்தின் பாடல்கள். இரைச்சலுக்குப் பெயர் பெற்ற இன்றைய தலைமுறை திரை இசைக்கு நடுவே ஒரு மென்காற்று, இப்படப் பாடல்கள். நன்றி வித்யாசாகர். பாடல் வரிகளில் கவிதை நயம் நிறைய. நன்றி வைரமுத்து, கபிலன், பா. விஜய் மற்றும் டாக்டர் கிருதியா. ஒன்பது பாடல்களில் சில மிகச் சிறியவை. 'இயக்குநரே- ஆளுநரே', ஸ்ரீராம் - ஹரிணி டூயட் சுறுசுறுப்பான தொடக்கம். எல்லாமே, ம்ம்... காதல் பாடல்கள்தான். ஆனால் உளறல் வரிகள் இல்லை. ('எ...எ...எ' என்று ஒரு பாடல் இருந்தும்!) 'தமிழைத் தொலைத்த தலைமுறை போல', 'நூறாண்டு வாழ்வதென்றால் உயிர் வலிக்கும் - நூறாண்டு வாழ்கவென்றால் உள்ளம் இனிக்கும்! 'சின்னச் சின்ன தாவரமே எனக்கு நீதா வரமே', அமர்க்களம் படப்பாடலை சற்று நினைவுபடுத்தும் 'கண்டுபிடித்தேன்' இவை எல்லாம் தமிழ் சினிமா கவிஞர்களிடமிருந்து இன்னும் கவிதை தொலைந்து போய்விடவில்லை என்று உணர்த்துகின்றன. 'பொய்' கலக்காத 'நிஜமான' நன்றி பாலசந்தருக்கு.

பந்துல ரமா சற்று வித்தியாசமான பாடகர். கனமான குரல். கொஞ்சம் அதிரடி அணுகுமுறை; புதுமை தேடும் வேட்கை. கானமுகுந்தப்ரியா (சென்னையில் இன்னொரு சபா!)வுக்காக அவர் பாரதிய வித்யா பவன் மினி ஹாலில் பாடிய முக்கிய ராகம் சிம்மேந்திர மத்யமம். 'நின்னே நம்மிதினய்யா' (மைசூர் வாசுதேவாச்சார்) கீர்த்தனை. ஆலாபனையை மேல் ஸ்தாயியிலிருந்து தொடங்கியும் ஸ்வரப் பிரயோகத்தில் நடையை மாற்றியும் புதுமை செய்தார். ஆனால் ஆலாபனை அளவுக்கு கற்பனை ஸ்வரங்கள் சோபிக்கவில்லை.

- ஜோதிஸ்வரூபிணி

ஜான் ஹேக்கிற்கு சிறைச்சாலை ரொம்பவும் போரடித்தது. ஒரு சின்ன ஏமாற்று வேலைக்குப் போய் நான்கு வருட கடுங்காவல் கொடுத்து நோகடித்துவிட்டார்கள். இந்த முறை வெளியே வந்துவிட்டால் சிறிய சிறிய திருட்டுகள் எல்லாம் செய்து நேரத்தை வீணடித்துக் கொள்ளாமல் பெரிதாக எதையாவது சாதிக்க வேண்டும் என்று தனக்குத் தானே உறுதிமொழி எடுத்துக்கொண்டான் ஜான்.

ஒருநாள் வழக்கம்போல் தாடியைச் சொறிந்துகொண்டு கதவருகே நின்று கொண்டிருந்த ஜானின் கண்களில் யதேச்சையாக அந்த செய்தித்தாள் கிடைத்தது. செய்தித்தாள் என்றுகூட சொல்ல முடியாது. அது ஒரு துண்டு காகிதம். ஆனால் அதில் வெளியான ஒரு சங்கதி ஜானை மிகுதியாக வசீகரித்தது. அந்தச் சங்கதி இதுதான். சல்ஃப்யூரிக் அமிலம் பொருள்களைச் சிறிது சிறிதாக விழுங்கி ஒன்றுமில்லாமல் செய்துவிடும்.

இரவு முழுவதும் ஜான் இந்த அமிலத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். இந்த அமிலத்தில் எதையெல்லாம் கரைக்கலாம்? பொருள்கள், என்று போட்டிருக்கிறார்களே, என்னென்ன பொருள்கள்? எல்லாமே முழுவதுமாகக் கரைந்து காணாமல் போய்விடுமா? அப்படியானால்... அப்படியானால்...

# அமில மனிதன்!

உடனடியாக அந்த அமிலத்தைத் தேடும் பணியில் இறங்கினான் ஜான். சில நண்பர்களின் உதவியால் அமிலம் சிறைக்குள் கொண்டுவரப்பட்டது. சிறைச்சாலை பரிசோதனைக்கூடமானது. ஜான் தனது பரிசோதனைகளைத் தொடங்கினான். காகிதம், மரக்கட்டைகள், துணிகள் எல்லாமே மாயமாய்க் கரைந்து போயின. அட...!

ஜான் அடுத்த பொருளை எடுத்தான். 'நீயும் கரைஞ்சு போறியான்னு பார்க்கறேன்' என்று சொல்லிவிட்டு கடகடவென சிரித்தான். 'கீச்கீச்' என்று அலறிக்கொண்டிருந்த எலியைப் பிடித்து அமிலத்துக்குள் சிறிது சிறிதாக நுழைத்தான். அந்த எலி மிச்சம் வைக்காமல் முழுவதுமாகக் கரைந்து போவதற்கு, மிகச் சரியாக முப்பது நிமிடங்கள் பிடித்தன. ஜான் பொறுமையாக யோசித்தான். ஒரு எலிக்கு முப்பது நிமிடங்கள். அப்படியானால்... அப்படியானால்...



**1944** ஆம் ஆண்டு விடுதலை செய்யப்பட்ட ஜான், ஒரு சிறிய நிறுவனத்தில் அக்கவுண்டன்டாக வேலைக்குச் சேர்ந்தான். ஒரு மாதம் ஒழுங்காக தானுண்டு தன் வேலையுண்டு என்று இருந்தான். எந்த வம்பு தும்புக்கும் போகவில்லை. முதல் மாதச் சம்பளம் வாங்கிய பிறகு நேராக கடைக்குச் சென்றான். நாற்பது லிட்டர் பீப்பாய் ஒன்றும் ஒரு அண்டா முழுக்க சல்ஃப்யூரிக் அமிலமும் வாங்கிக்கொண்டான். இரண்



7

டையும் வாங்கி வீட்டில் வைத்து விட்டு வழக்கம்போல் தனது பணிகளைத் தொடர்ந்தான்.

ஒருநாள் பாரில் உல்லாசமாகப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தபொழுது மெக்சுவான் என்பவனுடைய அறிமுகம் இவனுக்குக் கிடைத்தது. வசதியாக இருந்த அவனை உடும்புப்பிடியாக பிடித்துக்கொண்டான். ஒரு நெருக்கமான பொழுதில் மெக்சுவான் தன்னுடைய சொத்து





விபரங்களைப் பற்றி குடிபோதையில் தெரியாத்தனமாக ஜானிடம் உளறிக் கொட்ட, ஜான் விழித்துக்கொண்டான். 'பெரிதாக' சாதிப்பதற்கு ஏற்ற தருணம் அமைந்துவிட்டது என்பதை உணர்ந்தான்.

செப்டம்பர் 6, 1944, தன்னுடைய அபார்ட்மெண்டுக்கு வருமாறு மெக்சுவானை சிநேகத்துடன் அழைத்தான் ஜான். மெக்சுவான் மறுமொழி பேசாமல் வந்து சேர்ந்தான். வழக்கம்போல் இருவரும் ஒன்றாகக் குடித்தனர். நிமிடங்கள் கரைந்தன. நள்ளிரவு. மெக்கவான் தடுமாறியபடியே எழுந்தான். ''அப்ப நான் போய்ட்டு வரேன் ஜான்.''

இரண்டு அடிகள் கூட எடுத்து வைத்திருக்க மாட்டான். அதற்குள் குபீரென்று பாய்ந்த ஜான், மரக்கட்டையால் மெக்சுவானின் தலையைத் தாக்கினான். அலறியபடி மயங்கி விழுந்த மெக்சுவானை, தொடர்ந்து மரக்கட்டையால் வெறி வந்ததைப் போல் அடித்தான் ஜான். அவனது கைகளையும் கால்களையும் மடக்கி இறுக்கிக் கட்டினான்.

மெக்கவானின் உடலை இரண்டு கைகளாலும் பிடித்துத் தூக்கி அந்த அமில பீப்பாய்க்குள் அமுக்கினான்.

மருதன்

(திகில் பரவும்)



# வாரியார் அமுதம்!

நீ வயலில் எந்த விதையை விதைக்கின்றாயோ, அந்த விதைதான் விளைந்து உன் வீட்டுக்கு வரும். கம்பை விதைத்துவிட்டு, கோதுமையை எதிர் பார்க்கக் கூடாது. கருவேலை நட்டுவிட்டு சந்தன மரத்தைப் பெற முடியாது. அதுபோல நீ நன்மையே செய்தால் உனக்கு நன்மையே வரும். தீமையைச் செய்தால் தீமையை அநுபவிப்பாய்.

எல்லோருக்கும் நல்லவனாகவும், எல்லோரையும் மகிழச் செய்கின்றவனாகவும் ஒருவன் இருக்க முடியாது.

சந்திரன் குளிர்ந்த அமுத கிரணங்களை உலகுக்கு வழங்குகின்றான். முழு நிலவைக் கண்டு எல்லா உயிர்களும் உவகையுறுகின்றன. ஆனால் முழு நிலவைக் கண்டு தாமரை மலர்கள் குவிந்து விடுகின்றன. சந்திரன் தாமரைக்கு என்ன தீங்கு செய்தான்? ஒன்றுமேயில்லை.

சந்திரனைப் போல் உலகுக்கு நலம் செய்யும் நல்லோரைக் கண்டு சில புல்லோர்கள் இகழ்வார்கள்; வெறுப்பார்கள். பகைப்பார்கள். அதனால் நல்லோர்க்கு ஒன்றும் குறைவு உண்டாகாது.

(வாரியார் நூற்றாண்டு 1906 - 2006)

Registered with the Register of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.